# யோக சித்தி

(சமயோக சாதன விளக்கம்)



அருளியவர்

கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்




யோக சித்தியின் இந்த பதிப்பு
மறைந்த எனது மனைவி திருமதி. லீலா நாகராஜன்
நினைவாக வெளியிடப்படுகிறது.

கி. நாகராஜன்,
நூல் பதிப்பாளர்



10-1

# யோக சித்தி

## (சமயோக சாதன விளக்கம்)



கவியோகி மஹரிஷி சுத்தானந்த பாரதியார்

சுத்தானந்த நூலகம்
M 34 J, மஹாலெஷ்மி காலனி,
திருவான்மியூர், சென்னை - 600 041.
Visit us at www.shuddhashakthi.org

# நூல் விளக்கம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : யோக சித்தி |
| ஆசிரியர் | : கவியோகி மஹரிஷி சுத்தானந்த பாரதியார் |
| பதிப்பாளர் | : சுத்தானந்த நூலகம்<br>M 34 J, மஹாலெஷ்மி காலனி,<br>திருவான்மியூர், சென்னை - 600 041. |
| வெளியீடு நாள் | : 7/10/2000 |
| நூலின் அளவு | : 1/8 கிரவுன் |
| புத்தகங்களின் எண்ணிக்கை | : 1000 |
| தாள் | : 60 gsm |
| எழுத்து | : 11 pts |
| பக்கங்கள் | : 266 |
| விலை | : ரூ. 60/- |
| அச்சிட்டோர் | : Graphic Communications<br>8/1, K.P.M.Street,<br>Pudupet, Chennai - 2. |

10-1

# பொருளடக்கம்

# ஓம் வணக்கம்

எங்கும் நிறைவான பரம் பொருளே! மங்களக் காலையில் மலர்முகங் காட்டுகின்றாய்; இளமணத்தென்றலில் இன்பக் குழலூதுகின்றாய்; 'அன்பு, அன்பு' என்று சோலைக் குயிலில் அகவுகிறாய்; அதோ பாயும் மலையருவியில், 'ஓம் தத்-ஸத் ஓம்' என்று வேதமுரசொலிக்கிறாய்; திங்களில் அமுத நகை புரிந்து, எல்லையற்ற கடலைப் பொங்கி யெழுந்து ஆனந்தக் கூத்தாடச் செய்கிறாய்! இந்தக் குழந்தைகளின் மாசற்ற உள்ளத்தில், வானரசை இலக்குகிறாய்; மனை தோறும் சௌந்தர்ய சக்தியாக விளங்கிக் குல தருமத்தை வளர்க்கிறாய்; ஆணில் ஆண்மை, பெண்ணில் பெண்மையாகிக் காதற் கனலைத் தூண்டி, உலகம் உயிர் வாழச் செய்கிறாய்; வாழ்க்கை என்னும் ஆசானைக் கொண்டு, பாடங்கற்பித்து, எமது மனத்தைப் பக்குவப்படுத்தி, முடிவில் உனது திருவடியே தஞ்சமென்று உணர வைக்கிறாய்!

பரம்பொருளே! உலகெலாம் உனது திருக்கோயில்! உயிர்த்தொகுதி உனது திருமேனி; வாழ்க்கை உனது திரு விளையாடல். நீ வேறு, யாம் வேறு அன்றி உள்ளும் புறமும் உன்னை கலந்து அந்தப் பேரின்பத்தால் உனது பாராலயத்தில் உலவச் செய்தருள்! பரமனே! நீயே உண்மை. நீயே அறிவு. நீயே எங்கும், எல்லாம்! சாதி-மத-நிற-தேச-வகுப்பு வேறுபாடுகள் எமது மனத்தை விகாரப் படுத்தாமல், எவரையும் நினது நடமாடுங் கோயிலென்று காணும் அருளறிவை எமக்கருள். எமது வாழ்வு இன்பக்கனி குலுங்கி உயிர்த் தொகுதியாக விளையாடும் நினக்கே நிவேதனமாகுக!

அருள் தந்தையே! நாங்கள் நின் மைந்தர்கள். இந்த உலக மனையில் ஒரு குலமாக ஒருவருக்கொருவர் உதவி யாக வாழவருள்! கொடுங் கோன்மை, தனியகந்தை, பொய், பொறாமை, ஆணவமாயம், கொலை, புலை, கோள், வஞ்சம், குடி, களவு, சூது, விபசாரம், சண்டை சச்சரவுகளின்றி, அன்பும், ஒப்புரவும், எளிமையும், வீரமும், இரக்கமும், அமைதியும், உண்டுடுக்க யோக்கியமான ஒரு தொழில் முயற்சியும் பயின்று, எங்கும் என்றும் எதிலும் உன்னையே கண்டு, உனக்கே வழிபாடாக வாழ அருள்!

தந்தையே, எமது ஆற்றலுக்கேற்ற பொதுநலம் புரியத் துணை செய்! 'எனது, யான்' என்னும் அகந்தை வேரோடு அழிக! பூரணனே! இந்த வாழ்வாறு, உனது அருட்சுடராழியில் கலக்கவருள்! பரமாத்மனே வணக்கம். உனதருளில் வாழ்வதே யோக சித்தி, பூரண வாழ்க்கை. சுத்தம் வாழ்க! சுத்தன் வாழ்க! சுத்த நிலையம் வாழ்க! ஓம் சுத்த சக்தி!

எல்லா உயிர்க்கும் இறைவன் ஒருவனே
எல்லா உடலும் இறைவன் ஆலயமே
எல்லா ருக்கும் இயல்பாம் இன்பம்
எல்லா வாழ்வும் இறைவன் யோகமே!

சுத்தானந்த பாரதி.

# யோகப் பாட்டு

யோக பலம்பெற வேண்டும் — சக்தி
ஊற்றென வாழ்ந்திட வேண்டும்

தேகம் பலம்பெற வேண்டும் — மாந்தர்
சிவசக்தி யாக விளங்கிட வேண்டும் (யோக)

ஒருமையில் உயிர்ப்பது யோகம் — நடு
உள்ளத்தில் ஊன்றிடல் யோகம்

கருமுகில் மின்னலைப் போலே — உள்ளே
கனலிடும் தன்னையே காண்பது யோகம்(யோக)

அறிவினை வளர்ப்பது யோகம் — நல்ல
அறத்தினைக் காப்பது யோகம்

பொறிபுலன் அடங்கிய அமைதி — பெற்ற
புன்னகை பூத்த புலமையே யோகம். (யோக)

கல்வி வளர்ப்பது யோகம் — தெய்வக்
கலையினைக் காப்பது யோகம்

செல்வத் தொழில் செயல் யோகம் — செல்வம்
சீர்பெறப் பாத்தூண் மருவுதல் யோகம் (யோக)

பேச்சைச் சுருக்கிட வேண்டும் — மனப்
பேயை அடக்கிட வேண்டும்

மூச்சைச் சமன்செய வேண்டும் — நிதம்
முக்குண தொந்தங் கடந்திட வேண்டும் (யோக)

தூயநல் லுணவுடை நடையும் — உயர்
தூயநற் சிந்தையும் துலங்கி — ஆன்ம

நேய ஒருமையிற் கூடி — மாந்தர்
நேர்மையாய் வாழ்ந்திட வேண்டும் (யோக)

அவரவர் புலமையினாலே — உல
காலயப் பணிநலம் பரவி

கவின்கலை என மகிழ்வெய்தி — இங்கே
கனிவுற வாழ்வது வேசமயோகம்... (யோக)

யோக விஞ்ஞானத்தில் ஊன்றி — இங்கே
உயிர்க்குலம் தழைத்திட வேண்டும்

ஏக ஒருமை பெற் றிங்கே — மாந்தர்
எல்லாரும் அன்புறும் நல்லாறே யோகம் (யோக)

சுத்தானந்த பாரதி

# முன்னுரை

மகா மகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்

யோக சித்தி என்னும் இந்நூல் சமயோக வாழ்வை அழகாக இன்சுவையுடன் அனுபவ உண்மைகளுடன் விளக்குகிறது.

இதன் ஆசிரியராகிய கவியோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள், தூய வாழ்க்கையும், யோக சித்தியும், மதி நுட்பமும், பரந்த நூலறிவும் வாய்ந்தவர்களென்பது தமிழுலகம் நன்கறிந்ததே. இவர்களைப் போன்ற ஒருவரே இத்தகைய நூலை எழுதும் தகுதி உடையவராவர்.

ஒவ்வோ ரியலிலும் ஐவைந்து குறள் வெண்பாக்களைக் கொண்ட நூலின் விரிவுரையாக இது விளங்குகின்றது. பாரதியாரவர்கள் தம்முடைய பரந்த நூலறிவால் உணர்ந்தவற்றையும், அநுபவத்தால் அறிந்தவற்றையும், படிப்போர் உள்ளத்திற் பதியும் வண்ணம் இந்நூலில் எழுதியிருக்கிறார்கள். பல சமயத்தினருடைய கொள்கைகளில் உள்ள சிறந்த பொருள்களை வேற்றுமை யின்றி எடுத்துக்காட்டும் இவர்கள் இயல்பும், ஞாபக சக்தியும் மிகவும் போற்றற்குரியன.

இந்நூலைப் படிக்கும்போது, ஒரு மலையருவி வெள்ளம் புரண்டோடுவது போலத் தோன்றுகிறது. சில சமயம் வாழ்க்கையிலுள்ள குப்பைகளைத் தன் வேகத்தில் போக்கும் பிரசண்டமாருதத்தின் நினைவு உண்டாகிறது. அனுபவத்தில் உணர்ந்த உண்மைகளைப் பாரதியார் விளக்கும்போது நம்முடைய உள்ளத்தைத் தொட்டுக்கொண்டு மெல்லென்ற தென்றல் தவழ்வது போன்ற உணர்ச்சி உண்டாகிறது.

இந்நூலிலிருந்து பாரதியார் ஒரு வற்றாத இனிய தமிழ் ஊற்று என்பது புலப்படும். தமிழ்நாட்டினருடைய அறிவை மலரச் செய்வதற்கும், வாழ்க்கையைப் புனிதமாக்கி அதைப் பயன்படும்படி செய்வதற்கும் அமைந்த இப்புத்தகம் யாவரும் வாங்கிப் படித்து இன்புறுதற்குரியது.

# அணிந்துரை

## திருவாளர் திரு. வி. கலியாணசுந்தரனார்

விடுதலை யென்றே படுநிரை வையம்
கூவுங் குரலால் மேவும் பயனென்?
வழியும் உண்டு, விழியும் உண்டு
நடையும் நாட்டமும் உடைமையே வேண்டும்,
நடக்குனர் சிலரே ; நாடுனர் சிலரே,
இருவையும் ஈண்டிய ஒருவன் இந்நாள்
உள்ளான் இங்கே ; உள்ளந் தெளிந்த
*அரவிந் தத்தேன் அருந்தும் வண்டெனச்
சொல்லப் படுவோன் ; அல்லல் தீர்ந்தோன்
ஆரியந் தமிழே சீரிய மொழிபல
ஆய்ந்தாய்ந்தியற்கையில் தோய்ந்திறையுண்மையில்
உறுதி கொண்ட விரதன் ; அந்தணன் ;
ஒருமையில் நிற்கும் பெருமை யாளன் ;
சித்தாந் தந்தேர் சுத்தா னந்தன்.
உற்ற அடைவை மற்றவ ரடைய
வளர்வழி விழியும் கிளர் நடை நாட்டமும்
முறைமுறை அரணே நிறைபடி பலவும்
கோலி எடுத்தனன் சீலநல் யோக
சித்தியால் 'யோக சித்தி' என்றொரு
பந்தம் அறுக்குஞ் செந்தமிழ்க் கோயில் !
சேர்மின், விரைந்தே தேர்மின் !
கூடும் விடுதலை, கூடும் இனிதே !

---

* ஸஹஸ்ரார சக்தித் தேன்.

# சிறப்புப் பாயிரம்

கவிமணி சி.தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள்

பயன்றரு பனுவல் பற்பல கற்று
நயந்தர வுரைக்கும் நண்பனை யொத்தும்,
உலக வாழ்வின் உண்மையை உணர்த்தி
இகபர சுகங்க ளிரண்டையுந் தருமவ்
வழிகளை நன்கு வகுத்துக் காட்டும்
குணந்திகழ் ஞானக் குரவனை யொத்தும்,
உற்றுழி யுதவும் 'யோக சித்தி' யாம்
இப்பெரு நூலை, யொப்பருந் தவத்தோர்,
உள்ளதை உள்ளவா றுணர்ந்த உரவோர்,
சுத்தமெய்ஞ் ஞானச் சுடரெனப் பொலிவோர்,
அரிய பெரிய அறவோர் உறவால்
சகச நிட்டையால் சாதன நெறியால்
தானே பொங்கித் ததும்பிய அறிவால்
முன்னை வழக்கம் முற்றுமா ராய்ந்து,
பின்னை வழக்கம் பிழையறத் தேர்ந்து,
போக்குதற் குரியவை போக்கியும், ஆதரித்
தாக்குதற் குரியவை யாக்கியும், அழகாய்
இக்கா லத்துக் கிசைந்தநன் முறையில்
கற்றவர் தமக்கும் கல்லா தவர்க்கும்
எளிதில் விளங்கிட இனிய மொழியால்
அந்த ணாளன், அருந்தவப் புலவன்
சுத்தா னந்த சுவாமி யன்பொடு
குறளு முறையுமாய்க் கூறின னென்றும்
அந்தமி லின்ப மடைந்திச்
செந்தமிழ் நாடு சிறப்புற் றோங்கவே !

ஓம்

# யோக சித்தி

## சமயோக விளக்கம்

வாழ்வு முழுதும் யோகமாக வேண்டும். யோகம் என்றால் ஒன்றிப்பு. ஒவ்வோருள்ளத்தும் தூய பேரின்பப் பொருள் உள்ளது. அது சுத்தான்மா. அதுவே மானிடத்தில் உயிர்க்குயிராக விளங்கும் கடவுள். மனமாயங் கடந்து உள்ளத்திற் கனலும் இன்ப மயமே கடவுள். கடவுளைக் கலந்த வாழ்வு களிப்பு; பிரிந்த வாழ்வு கசப்பு. உட்பொருளான சுத்தான்மாவை ஒன்றி வாழ்தலே சம யோகம், அதன் உணர்வின்றி வாழ்தலே மோகம். சோகம். சுத்தான்மவுணர்வே உள்ளந்தோறும் இன்பவூற்று. அது பாய்ந்தால் வாழ்க்கை அமரானந்தச் சோலையாகும். அந்த அருளானந்தவூற்றை இருளாணவ மனம் மூடிக்கொண்டிருக்கிறது. அசுத்த மனத்தால் சுத்தான்மா உணர்வாகாமல், மனித வாழ்வு கட்டுங் கவலையும் பற்றி மயங்குகிறது.

இருட்கடலில், மனித வாழ்வு சென்று கொண்டிருக்கிறது. அது சித்தச் சுழல்களில், மனமாயப் புயல்களில், ஆசையாணவப் பாறைகளிற் பட்டுத் தத்தளிக்கிறது. அகங்காரத் துடுப்பினால் அஃது இன்பத் துறை சேராது. துறைசேர்க்கும் முதல்வனை அது மறந்து பிரிந்திருக்கிறது. அவனை யறிந்து அவன் கையில் படகைத் தந்தால், அவனது அருள் துடுப்பு அதைப் பேரின்பத் துறை சேர்க்கும். பாசான்மாவான மானிடம் மனமாசகன்று, தன்னுட் கோயில் கொண்ட சுத்தான்மக் கடவுளைக் கலந்து நின்றால், கவலையற்ற, கட்டற்ற, தூய, பேரின்ப வாழ்வெய்தும்.

உள்ளமே விண்ணகம், சிற்சபை, சுத்தான்மாவே அதில் நடம்புரியும் இயற்கைக் கடவுள். அதையே காயத்திரி 'அந்தப் பரமாத்ம ஞாயிறு" (தத்ஸவிதுர் வரேண்யம்) என்னும். "அஃது இதயகுகையிற் கனலும் இன்பத் தீ, அதுவே நமது உண்மை. அதையறிவதே அறிவிற்கரசு; அறிந்தோன் அமரனாவான். அதை உள்ளத்திற் காணுந்தீரருக்கே அமைதி யின்பம் உரியது" என்பதே 108 உபநிடதங்களின் சாரமாகும். "ஒன்றே கடவுள் (ஏகோதேவ); அஃது எல்லாருள்ளும் மறைந்துறைகின்றது (ஸர்வபூதேஷு கூட:); அது ஸர்வ வ்யாபி; ஸர்வ பூதாந்தராத்மா. மானிடத்தில் உள்ள இந்த அந்தராத்மாவே சூரியனிடமும் ஒளியாயுள்ளது. அது சுத்தான்மா. அதுவே நீ (ஸ ஆத்மா தத் சுக்ரம்; தத்வமஸி). அதையறிந்த தீரன் அஞ்சான். கவலான்; 'யாதுங் கோவில் யாவருந் தானே' என்றுணர்வான்" என்று வேதங்கள் முறையிடுகின்றன. "இந்த இயற்கையுடல் இடம், க்ஷேத்திரம். அதில் நான் இடங் கொண்டுள்ளேன். நான் எல்லார் உள்ளத்தும் ஒளிரும் ஆத்மா' என்றார் பகவான் கீதையில். "அறிஞர் பிரம்மத்தை ஆன்மாவாகவே அடைகின்றனர். இந்த ஆத்மா இதயத்தில் உள்ளது (ஹ்ருதிஹ்யேஷ ஆத்மா)" என்று பிரம்ம சூத்திரம் விளக்குகிறது. "உளன்கண்டாய் உள்ளுவார் உள்ளத்து. உள்ளத்தேவை நெஞ்சே யுணர் ! உட்கலந்தாருக்கு ஓர் அமுதே" என்று திருவாய்மொழி முறையிடுகிறது. "சிதம்பரமே, பரம்பரமே, சித்தத்தில் தித்திக்கும் தேனே, மன்றுள் ஒளியே, அம்பலத்தரசே, அமுதே, உடையாய், உடலிடங் கொண்டாய், உள்ளமே" என்று சித்தாந்த முத்தி முதல்வர் அதை அருமையாக உணர்கின்றனர். "உள்ளம் பெருங்கோயில். தெள்ளத் தெளித்தார்க்குச் சீவன் சிவலிங்கம்; உள்ளம்விட் டோரடி நீங்காவொருவன்" என்று திருமூலமந்திரம் அந்தச் சுத்தான்மாவை விளக்குகிறது.

'இந்தச் சுத்தான்மாவே நான்' என்றறிந்து, அதைப் பிரியா தொன்றிநிற்றலே யோகமாம். உடல், உயிர், மனம்,

உள்ளம் அனைத்திலும் அதனொளியை விளக்கி, மனித வாழ்வைச் சுத்த முக்த சமத்துவச் சுடர் வாழ்வாக்குவதே யோக சித்தி. முதலில் சுத்தான்மக் கலப்பெய்த வேண்டும். அதனால் அருட்கனலாகிய சுத்த சக்தி நம்முட் பாய்ந்து பரவும். வாழ்விற்கு இன்றியமையாத ஒவ்வொரு நுட்பச் செயலையும் அந்தச் சக்தியால் மாசு நீங்கிச் சுத்தான்ம யோகமாகச் செய்யலாம். இவ்வாறு ஆண் பெண் அடங்கலும் சுத்தான்ம சேதனத்தில் வாழமுடியும். இந்த வாழ்வையே சமயோகம் அல்லது சுத்த சக்தி யோகம் என்கிறோம். அன்பு, அறிவு, தொழில் எல்லாம் அந்த வுணர்வில் மலர வேண்டும். அப்போது பேதபுத்தி யொழியும்; சாதி மத கோத்திர நாடு நிறப் பிரிவினைகளுக்கே இடமிராது. தானான சுத்தான்மாவே அனைத்தும் என்றறிந்தால், யார் யாரை அஞ்சுவது, மிஞ்சுவது, அடக்குவது, வேறுபடுத்துவது? தானே உலகம் என்றறிந்தபின் யார் யாருக்குத் தீங்கிழைக்க முடியும்? சுத்தான்ம வுணர்வு பெற்றவருக்கு மத நூல்களேயில்லாமல், அறவழி துலங்கும். சூரியமண்டலத்திற்கு விளக்குப் போடவேண்டுமா?

சாதனமில்லாத சாத்திரபடிப்பு சாரீரமில்லாத சங்கீதம் போலாகும். அறத்திற் கழகு அனுட்டானம். தருமத்திற் கழகு தரும சாதனம். சாதனமில்லாமல் வாய் முணுமுணுப்பும் ஐதிகச் சடங்குகளும் வலுத்துப்போய், அருளறிஞர் உபதேசங்கள் எல்லாம் சாதிமதச் சண்டைகளாகப் பெருகி, உலகைபிரித்துக் கலகக் காடாக்கின. "ஒற்றுமையாயிரு, அன்பு செய்: உண்மை பேசு; பகைவர்க்கும் பரிவு செய், காமம் விலக்கு! கோபம் வேண்டா! பிறர் பொருளைத் திருடாதே, உயிர்க்கொலை பாவம். பொறுமையாயிரு!" என்று எல்லா மதங்களுமே உபதேசிக்கின்றன. மத ஸ்தாபனங்கள் ஏராளமாக உள்ளன. சர்வதேச மகாநாடுகளும், சர்வமத மகாநாடுகளும் கூடுகின்றன. சமுக சீர்த்திருத்தங்கள் வேறு அவரவர் மனப்படி நடக்கின்றன. எல்லாவற்றையும் உண்டு

ஏப்பம் விடுகின்றன போர் வெறியும், போட்டி பொறாமைச் சண்டைகளும்! பையில் வேதம், கையில் வெடிகுண்டா யிருக்கிறது. மனப்புண் முகத்திலே தூடவினாற் போகுமா? ஆசையாணவப் பேய்பிடித்தவர்க்கு அமைதி யின்பமேது? உள்ளமைதி யில்லாது உலகமைதிவராது. உள்ளொற்றுமை யில்லாது உலகொற்றுமை இயலாது. உள்ளுண்மை விளங்காது தெள்ளறிவு வெய்தாது. தன்னிடம் உள்ள இன்பத்தை யுணராது, புலன்களால் எத்தனை போக போக்கியங்களை நுகர்ந்தாலும், அவை இன்றினித்து நாளையே கைத்துப்போம். தர்க்க வாதங்களை நிறுத்துங்கள்; சாதி சமயப் பொருபொருப்புக்களைப் போக்குங்கள்: பேதபுத்தி யென்னும் பேயை துரத்தியொழியுங்கள்; ஆணவமனதைச் சிலுவையிடுங்கள்; பொறாமையென்னும் புரட்சிக்காரனை யடக்குங்கள்; ஆங்காரமென்னும் அறிவிலியை விரட்டுங்கள்! புறந்திரியும் மனத்தை உட்குவித்திருங்கள்; உங்கள் உண்மையான சுத்தான்மாவை அறியுங்கள்; வாழ்வை அதனுடன் கலந்த யோகமாக்குங்கள்; சாதனஞ் செய்யுங்கள்! போர் போட்டி பொறாமைகள் ஒழியும், அமைதி பொலியும், அன்பு நிலவும், அறிவொளிரும், உழைப்பும் பிழைப்பும் பெருகும். நிலவளமும், பயிர் வளமும், தொழில் வளமும் பொலியும். சாதி சமயச் சண்டைகள் ஒழியும். சாத்திரச் சந்தடிகள் அடங்கும். அவரவர் மனச் சாட்சியே அவரவர்க்கு அறவழி துலக்கும். அவரவர் உள்ளமே அவரவர் கோயிலாகும். அவரவர் உள்ளத்தானாகிய சுத்தான்மாவே அவரவர் தெய்வமாகும், சுத்த சக்தியுணர்வே வழிபாடாகும். ஒற்றுமையும், உயிரிரக்கமும் பெருகும். ஆண்பெண் வாழ்வு இல்லற யோகமாகும். ஆண்கள் நடமாடும் சாமிகோயிலாவர்; பெண்கள் அம்மன் கோயிலாவர். ஆண்மையின் அறிவொளியும் பெண்மையின் சக்திக்கனலும் சேர்ந்து வாழ்வைச் சுத்தசக்தி சமயோகமாக்கும். அன்றே சஞ்சலச் சாத்தான் ஒழிவான்! அன்றே அருளரசு வரும்! அருட்புலவர்

கண்டுணர்ந்த இந்தச் சுத்தான்ம ஞானத்தில் வேரூன்றி, மனித வாழ்வு அன்பு கிளைத்து, அறிவு மலர்ந்து, இன்பக்கனி பழுக்கவேண்டும். சுத்தான்ம சமயோகத்தால் வாழ்வெல்லாம் தெய்வ மின்சாரம் பரவும். உலகெல்லாம் ஒரு தெய்வ சங்கமாகி, அருளும், அழகும், அறிவும், அன்பும், வாய்மையும், தூய்மையும், அறமும், ஆற்றலும், அமுதும், ஒளியும், நிலவும். நூறு பேர் இத்தகைய யோக சித்தி பெற்றால், அவர் யோகசக்தி ஆயிரக்கணக்கான பேர்களுக்குப் பரவும். தெய்வ சைதன்யம் ஒவ்வொரு பூரண யோகியின் மூலமும் உலகில் விளையாடும். எத்தொழிலைச் செய்தாலும், இறைவனிடம் மனம் ஈடுபட்டிருக்கும். ஒவ்வொருவரும் அனைவருக்காக, அனைவரும் ஒவ்வொரு வருக்காக, எல்லாரும் இறைவனுக்காக வாழ்வர். இந்தச் சமயோக சித்தி ஆண் பெண் அடங்கலுக்கும் பிறப்புரிமையான பொது வுடமையாகும். இதைப் பெற்றவரே பிறந்த பயனெய்துவர். இந்த யோக சித்தியால் மனித சமுதாயம் மாறிப் பிறந்து, தெய்வ சமுதாயமாகும். உலகில் விண்ணரசொளிரும்.

சுத்தான்ம யோக தருமத்தையும், அதை வாழ்வின் ஒவ்வொரு நுட்பப் பகுதியிலும் அமைத்துப் பரிபூரணம் பெறும் பயிற்சி முறைகளையும் யோக சித்தி யென்னும் இந்நூல் விரிவாக விளக்கும்.

சுத்தம் வாழ்க ! சுத்த சமயோகம் வாழ்க !<br>
சுத்த சமயோக சமாஜம் வாழ்க !

ஓம் சுத்த சக்தி

# யோக சித்தி

எல்லா வுயிர்க்கும் இறைவன் ஒருவனே
எல்லா வுடலும் இறைவனா லயமே
எல்லா ருக்கும் இயல்பாம் இன்பம்
எல்லார் வாழ்வும் இறைவன் யோகமே

இதுதான் யோக சித்தியின் எடுப்பும் முடிப்புமாகும். உயிர் உலகு இறை இம்முப்பொருள் விளக்கமே நான்மறையாகும். எல்லாவுயிர்களுக்கும் உயிராக உயிர்ப்பது ஒரே இறைப்பொருள், எல்லா உடல்களிலும் அதுதான் உள்ளப்பொருளாக நின்று இயங்குகிறது. எல்லாவுடல்களும் அதன் கோயில்களே; எல்லாப் புலன்களும் அதன் வாயில்களே. இறைப்பொருள் இன்பமயம். இன்பமே சிவம்; சவமானவுடலில் சத்தான சிவம் இன்பமயமாயிருக்கிறது. அந்த இன்பப் பொருளை உணராது மனம் இங்குமங்கும் புறத்தேயலைந்து துன்புறுகிறது. உள்ளின்பப் பொருளான இறைவனை உணர்ந்து கலந்து வாழ்வதே யோகமாகும். இறைவன் அல்லது கடவுளினியல்பை இனிக் காண்போம்!

## 1. கடவுளியல்

கடவுள் உள்ளத்தான், உலகத்தான், ஒருவன், பரமன். கடவுட் பெருமை, இயல்பு, உண்மை, அருள்விளக்கம், வழிபாடு, கடவுளடைவு ஆகியவற்றை இவ்வியல் விளக்கும்:

### 1. கடவுள்

**ஓங்கார மாகி யொளியா யுயிர்க்குயிராய்**
**நீங்காதான் இன்ப நிறைவு. 1**

கடவுள் எங்கும் நிறைந்த ஓம் வடிவன், பிரணவ சொரூபி. அவன் அருளொளி, அவனே உயிர்க்குயிராக

உள்ளந்தோறும் கோயில் கொண்ட சுத்தான்மா. அவன் எல்லாவற்றிலும் நீங்காதிருக்கிறான். தோன்றும் யாவும், எல்லா உடல்களும் நீங்கி மாறினாலும், அவன் நீங்காது மாறாது அசையாது உள்ளபடியிருக்கும் சுத்தமுக்த நித்தியன். அவன் வற்றா நிறையின்பன், பரிபூரணானந்தன், சுத்த சச்சிதானந்தன். இதுவே யோகிகள் அனுபவம். தியானம் நிலைத்ததும் சித்தசுத்தி யுண்டாகும். சுத்தத்தால் சத்தம் பிறக்கும். உள்ளே ஓம் என்றொரு நாதம் முரலும். "ஓமே பிரம்மம். ஓம் என்றே அவனைத் தியானிக்கவும். (ஓமிதி ப்ரம்ம; ஓமிதி த்யாயத ஆத்மானம்)" என்று வேதம் முழங்குகிறது. அ—உ—ம் என்ற மூன்றொலிகள் சேர்ந்து ஓமாகும். அ, அனைத்திற்கும் தாயொலி. அது சத், உண்மை, தன்மயம், தற்பரம், பரமான்மா என்று பொருளாகும். உ, உலகான்மா, சிற்பரம். சின்மயம், சித்து, அறிவு, அருள், சக்தி எனப் பொருளாகும். ம், ஆனந்தம், இன்பம், ஜீவன் எனப்பொருளாம், சுத்த சச்சிதானந்தனான பரமாத்மன், தனது சிற்சக்தியால் ஆனந்த மயமாக எங்கும் நிறைந்து எல்லாம் ஆக்குவான். அவன் விழிப்பு, துயில், மறதியாகிய உணர்வுநிலை கடந்த துரியப் பொருள். ஜக—ஜீவ—பரம் அவனருள் விளக்கமே. அவன் ஓங்காரப் பொருள். இடைவிடாத ஓங்கார தியான ஜபத்தால் ஆதார சக்கரங்கள் மலரும், புருவ நடுவிலுள்ள ஆஞ்ஞா சக்கரத்திற்குமேல் ஓர் ஒளிகாணும். அந்த ஒளியையே தியானித்தால், ஒரு மெல்லிய உயிர்க்கனல் நாடிகளிற் பாய்ந்து பரவும். கதகதவென்று அதை யோகிகள் எப்போதும் உணருவர். அதையே சக்திநிபாதம், குண்டலினி, பிரம்மாகாரம், சுத்தசக்தி யென்பர். இக்கனல் தியானத்தை இயல்பாக்கி, மனத்தைப் புறஞ்செல்லவிடாது உள்ளத்தில் இருத்தும். அதன் பிறகு உயிர்க்குயிரான, அந்தராத்மா அல்லது சுத்தாத்மா உணர்வாகும். சுத்தான்மாவில் மனம் லயித்ததும், ஒரு நொடிகூட அதை விட்டுப் பிரியாத சகச சமாதியெய்தும். அப்போது உடல் ஒரு சட்டைபோலத் தோன்றும் நான்

சுத்தான்மா என்ற அறிவு நீங்காது இயல்பாகும். "என்னைப் பிரம்மன் நீங்கான். நான் அவனை நீங்கேன்; அணுவில் அணுவாய், மகத்தில் மகத்தாம் அவன் யாதுமாய் யாங்குமாய், யாதிற்கும் அப்பாலாய் விளங்குகிறான்'' என்னும் வேதவாக்கை நேரே உணரலாம். அந்தச் சுத்தான்ம உணர்வாலே இன்பநிறை வுண்டாகும். இவ்வாறு தியான தாரணை, சமாதி, சகஜநிட்டைகளால் சுத்தான்ம சாட்சாத்காரம் பெற்ற யோகிகள் இறைவனை, 'ஓங்காரம் அருளொளி, உயரிக்குயிரான அந்தராத்மா, கைவல்யம், நித்தியம், இன்ப நிறைவு' என்று அறிவர்.

உள்ளத்தான், ஓங்கு முலகத்தான், பேரின்ப
வெள்ளத்தான் விண்ணின் விளக்கு. 2

இறைவன் அனைவர் உள்ளத்திலும் சுத்தான்மாவாக விளங்குகிறான்; தனது அருளால் ஓங்கும் உலகில் விசுவாத்மாவாக, உலகநாதனாக விளையாடுகிறான். அவன் பேரின்பந்தரும் அருள் வெள்ளமாக, சுத்த பரிபூரண சத்தியாக எங்கும் நிறைந்துள்ளான், அவன் பரமாகாயத்தின் அருட்பெருஞ் சோதி மணிவிளக்காக விளங்குகிறான்.

'நான், எனது, எனக்கு' என்னும்போது எங்கே நெஞ்சைத் தொட்டுப் பேசுகிறோமோ அங்கேதான் உள்ளம் உள்ளது. சுத்தான்மா உள்ள இடம் உள்ளம். உயிரிகளுக்கிடையே, நெஞ்சக்குழியில், நாபிக்குச் சாண்மேலே. பதுமகோசம் போன்று உள்ளம் உள்ளது. அதன் நடுவே ஒரு நுண் குகையுள்ளது. அதில் கார்மேகத்திடையே மின்னற் கொடிபோல ஒரு கனற் கொழுந்து நடம் புரிவதைய யோகியர் நன்குணர்வர். புலன்கள் மனத்தில் ஒடுங்கி, மனம் புத்தியில் ஒடுங்கி, புத்தி உள்ளத்தில் அடங்கிய உள் மோனத்தில் அந்தச் சுத்தான்மக்கனல் உணர்வாகும். உள்ளே சுத்தாத்மாவைக் கண்டவர் அதையே உலகான்மாவாகக் காண்பர். ஏனெனில், உள்ளிருப்பதே உலகிலும்; உள்ளான்மா, உலகான்மா,

பரமான்மாவாக இறைவனைக் கண்ட யோகியர் எங்கும் அவனது பேரின்ப அருள் வெள்ளத்தையே உணர்வர், உள்ளம் உச்சி இரண்டும் தியான நிலையங்கள். உள்ளத்தில் தியானித்தால் இன்ப வெள்ளமாகும். உச்சியில், ஸஹஸ்ராரத்தில் தியானத்தை யூன்றினால். அருட்பெருஞ்சோதி யறிவு மலரும். "விண்ணரசு உன்னுள்" என்றார் ஏசுநாதர். ஸஹஸ்ராரமே அந்த விண். அதில் சுத்தான்மச் சுடர் நிலவுகிறது. அதையே பொன்னொளி, கதிர்நிறை சோதி, அருட்பெருஞ்சோதி, உயர்க்குயிரான ஞாயிறு என்று முனிவர் கண்டனர். "பொன்னற்குடத்திற் பொலிபெரும் விளக்கு" (நானாச் சித்ர கடோதர ஸ்தித மஹா தீபப்ரபா பாஸ்வரம்) என்று சங்கரர் சுத்தான்மாவை விளக்குகிறார்.

**எண்குணத்தான், ஏகனே யெல்லா மடங்கவுளான்**
**புண்ணியனாம் போதப் பொருள்.** 3

அத்தகைய அருட்சோதி யின்பக் கடவுளின் தன்மைகள் எட்டு : -மாசறு தூய்மை, பேராற்றல், பேரறிவு, பேரின்பம், முற்றுணர்வு, சுதந்தரம், கட்டின்மை, இயல்பு திரியாது இருந்தவாறு இருத்தல். அத்தகைய பெருமைசான்ற இறைவன் ஒப்பற்ற ஒருவனே; அவனன்றி எதுவுமில்லை. அவனில் எல்லாம் அடங்கும். அவன் யாதிலும் அடங்காச் சுதந்தரன் ; தாக்கற்ற தனி முதல். அவன் புண்ணியன், சுத்தன், தரும மூர்த்தி, கொடைவள்ளல். அறிஞர் அறியும் அறிவுப் பொருள் அவனே!

இறைவன் துயரணுகாதவன், வினையிலி, இருவினைப் பயன்கள் அணுகாதவன். புருடோத்தமன், எல்லா மறிந்தவன், அகாலன், நித்தியன், அனைவருக்கும் அந்தர்குரு.

**காற்றைக் கனலைக் கதிரைக் கடலுலகைத்**
**தோற்றினா னன்பர் துணை.** 4

அன்பருக்குத் தோன்றியும் மறைந்தும் துணை புரிகிறான் பரமன். "தோன்றாத்துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே" யென்றார் அப்பர். உயிர்க்குலமெல்லாம் அவன் அருட்குலம், அன்புச் சேய்கள். அவன் தந்தை, அவனது சக்தி தாய். இரவியின் கதிர்கள் போன்று அவனிடமிருந்து அருட்கதிர்கள் விரிகின்றன. அக் கதிர்கள் நுட்பமான ஆகாயமாகப் பரிணமிக்கின்றன. அதில் எண்ணரிய பரமாணுக்கள்(Electrons) சுழல்கின்றன. அவற்றின் வேகத்தால் காற்றும், காற்றின் வேகத்தால் தீயும், தீயின் வேகத்தால் நீரும், நீரின் வேகத்தால் மண்ணும், மண்ணின் இயல்பால் பயிர்களும் உண்டாகின்றன, பயிர்களை யுண்டு உயிர்கள் தழைக்கின்றன. இவ்வாறு எல்லாம் வல்ல ஒரு சக்தியிறைவன் சந்நிதிக்கே அனைத்தும் இயல்பாக உண்டாகின்றன. கடவுளின் சிருட்டித் தொழில் கருமான், தட்டான், குயவன், தச்சன் தொழிலைப்போல முயன்று சங்கற்பித்துச் செய்யப் படுவதன்று. மலையூற்றிற் பொங்கியெழும் தண்ணீர் இயல் பாகக் கீழிறங்கி, ஒரு வழிபற்றி, ஆறாகப் பரிணமித்துப் பயிர்களையும் உயிர்களையும் வளர்த்து, உடம்பு தோறும் உயிரெனத் திரிகிறது. அதுபோன்றே, இறைவனது சக்தி வெள்ளம் இயற்கை யுலகாகப் பரிணமித்தது. அதனாற்றான் இங்கே 'தோற்றினான்' என்றது. ஒன்றிலிருந்து பல இயல்பாகக் கிளைத்துப் பரவுகின்றன. ஒன்றினின்றொன்று கிளைத்து ஒன்று பலவாக விரிகிறது. அந்தப் பரிணாம சக்தி திருவருளினின்றே போந்தது. இவ்வாறு, உயிர்க்கக் காற்றையும், உயிர் இயங்கும் சக்திக்கனலையும், ஒளியும் மழையும் அளித்து உலகை இயல்பாகப் பேணும் கதிரவனையும், மழை மேகங்களுக்குப் பிறப்பிடமான கடலையும், இவை யனைத்தாலும் உயிர்வளமும் பயிர்வளமும் பெற்றுச் செழிக்கும் உலகையும் சக்தியிறைவன் தனது அருளினின்று தோன்றச் செய்தான். "தானே கடல் மலையாதியாய் நிற்கும். தானே யுலகின் தலைவனுமாமே"

என்னும் திருமந்திரம். ஆகாசம் பிரம்மசரீரம்; அதனின்று காற்று எழுந்தது; காற்றினின்று கனல் எழுந்தது. கனலினின்று நீர்; நீரினின்று தரை; தரையினின்று பயிர்; பயிரினின்று அன்னம்; அன்னத்தினின்று ஜீவன் எழுந்தது" என்னும் வேதம்.

எல்லா மவனுடைமை; யெல்லா மவனாணை;
எல்லா மவன் பொதுவென் றெண். 5

இவ்வாறு தோன்றும் உலகெல்லாம் அவனது சக்தி விரிவே, நிலமின்றிப் பயிரில்லை. கதிரவனின்றிக் கதிர்களும், ஒளியும், பகலும் உலகவாழ்வும் இல்லை. அதுபோன்றே இறைவனின்றி எதுவுமில்லை. ஆதாரம், ஆதேயம் எல்லாம் அவனே. ஆதலால், ஆராய்ந்து பார்த்தால், எல்லாப் பொருள்களும் அவனுடைமையே. அவனே உடையான். தோன்றும் உலகும், தோன்றா வுலகும் நடப்பது அவனது ஆணையான பராசக்தியாலேதான். அவனது இச்சா கிரியாஞான சக்தியினாலேதான் எண்ணரிய உலகங்கள் இயங்குகின்றன. எல்லாம் அவனே. உருப்பொருட்களுட் கருப்பொருளாயிருப்பவன். உடல்களில் உயிராகவும், உயிர்களில் உயிர்க்குயிரான சுத்தான்மாவாகவும் நிறைந்தவன் அவனே. இயற்கை யுலகம் ஒரு மின்பொறி. இறைவனருள் மின்சாரம். அப்பொறி எத்தனை கோடி வியன்களைச் செய்தாலும் எல்லாம் அந்த மின்வன்மையாலன்றோ? எல்லாம் அருளால் ஆக்கி அளித்து, மாற்றிப் புதுக்கும் இறைவன் அனைத்திற்கும் பொதுவாக எங்கும் நிறைந்திருக்கிறான். அவனை எண்ணுக; தியானஞ் செய்க! தியானத்தால் அவனை உள்ளே உணரலாம்.

## 2. உள்ள பொருள்

பெயர்வடி வாதியவாம் பேதங் கடந்த
வுயர்பொருளொான் றுண்டென் றுணர். 1

நாம் பல பெயர்களைக் கேட்கிறோம்; பல வடிவங்களைப் பார்க்கிறோம். அவை பல வேறுபாடுகளை யுடையன. ஆனால் இவற்றைக் கடந்த உயர்ந்த பரம்பொருள் ஒன்று உண்டு. அதை உட்குவிந்த தியானத்தால் உணர்க. நட்சத்திரங்கள் பல; ஆகாயம் ஒன்று; பூக்களின் பெயர் வடிவுகள் பல; பூந்தேன் ஒன்று, ஒரே சூரியனுக்கு, பல மொழிகளில் வித விதமான பெயர்கள் வழங்கும். ஒரே மின்சாரமே மணியடிக்கவும், ஒளியேற்றவும், காற்றாட்டவும், சூடேற்றவும், குளிராக்கவும் பயனாகிறது. மிட்டாய்கள் பல பெயர்வடி வானாலும், இனிப்பு ஒன்றே. உடல்கள் பலவானாலும் அனைத்தையும் ஆளும் சுத்த சக்தி ஒன்றே. ஒரே அணுசக்தியே ஐம்பூதங்களாக விளங்குகிறது.

**பலர்பற் பலவாகப் பாரிற் பகர்வர்!**
**உளனொருவ னென்றே யுணர்.** 2

உலகத்தில் பல சமயத்தார் பலபலவிதமாக இறைவனைப் பற்றிச் சொல்லுகிறார்கள். ஆனால் உள்ள பொருள் ஒன்றே. இந்த ஒன்றையே ஈசுவரன், அல்லா, பரமபிதா, யகோவா, சிவன், விஷ்ணு என்று பலவிதமாகப் பாவிக்கிறார்கள். கொழுக்கட்டை பல; பூரணம் ஒன்று. தரை ஒன்று; தோட்டம் பல, சத்தி ஒன்று, ஜகம் பல. உள்ள பொருளை யறிந்தால், பேத புத்தி நீங்கும். உயர்பரம்பொருளில் எல்லாம் ஒன்றே.

**ஐந்தரணுக் குள்ளே யரசாளு மன்னவனை**
**ஐந்தடக்கி யன்பா லறி.** 3

நமக்குள் உள்ள மன்னவன் சுத்தான்மா. அவன் ஐந்து கோட்டைக்குள் இருந்து காயாபுரியை ஆளுகிறான். ஐம்புலன்களை யடக்கி மனங்குவிந்து, ஒருமையுற்ற அன்பால் அவனை யறிக. ஐங்கோட்டையாவது ஐந்து கோசம்: 1. எலும்பு, நரம்பு, தசை, தோல் போர்த்த அன்னமய கோசம் : பருவுடல்; தூலாதாரம். இது ஐம்பூதக்கூடு. பெயர் வடிவ சாதி

குல வேறுபாடுகளெல்லாம் இதற்கே, 2. பிராணமய கோசம்: வீரிய தேகம்; உயிருடல். இது நாடிகளின் பின்னல். பிராணவாயுவும் கர்மேந்திரியமும் கூடியது. பசி, தாகம், காமம், வெகுளி முதலிய தினவுகளைக் கொண்டது. 3. மனோமய கோசம் : இது மனமும் ஞானேந்திரியமும் கூடியது. இன்ப துன்ப அலை வீசிக் கொந்தளிக்கும் மனதை இராஜயோக சாதனத்தால் அடக்கியாளலாம். 4. விஞ்ஞானமய கோசம் : இது புத்தியும் ஞானேந்திரியமும் கூடியது, நான் ஆத்மா என்ற அறிவு கொண்டது. 5. ஆனந்தமய கோசம் : இதுவே காரண சரீரம், இதில் ஆத்ம சுகம் புலனாகும். இந்த ஐந்து கோசங்களைத் தாண்டி, சித்தும் சத்தும் ஆன சுத்தசக்தி பரமாத்மனை அறிவதே அறிவாகும்.

அருளாலே யுள்ளத் தறிவா யிலங்கும்
பொருளாலே யின்பப் பொலிவு. 4

எல்லாரும் பேரின்பம் வேண்டுகிறார்கள்; பேரின்பம் பரம்பொருளே, அப்பொருள் உள்ளத்தில் அறிவாக விளங்குகிறது. அதை அருளுணர்வால் உணர வேண்டும். அன்பின் தீவிரத்தாலும், சித்த சுத்தியாலும் அருள் உண்டாகும். இந்த அருளே யோக சக்தி, சத்திநிபாதம், குண்டலினி, பிரம்மாகாரம் என்பதாகும். அருட் சக்தியின் விறுவிறுப்பால் தியான சமாதி கூடும், மனோலயமாகும்; சுத்தசக்தி சித்தி சேரும்.

விழிமி னெழுமினுள்ளே விண்ணரசைக் கண்டு
செழிமின்சுத் தானந்த சித்து, 5

மனிதர்காள், நீங்கள் அடையவேண்டியது சுத்த ஆத்மானந்த சித்தி. அஃது உங்களுள் இருக்கும் வான் அரசாகிய சகஸ்ராரத்தில், துரியாகாச நிலையத்தில், ஏழ்நிலை மாடத்தில், அருட் சுடராக விளங்குகிறது. அதைக் காண ஞானவிழிப்பைப் பெறுங்கள், சக்திக் கனலுடன் யோக சாதனத்தை எழுப்பி, மேன்மேலும் உயருங்கள். சித்தம்

தெளிந்தால், சக்தி விழித்தெழும். அது மேலோங்கினால் உண்மையான தூய அறிவின்பம் உச்சியில் ஒளிபெறக் காணும். அதையே எழுச்சி, அருட்சி என்பது. இதை அனுபவிப்பதே அருளாட்சி — அல்லது விண்ணரசாட்சி யாகும்.

## 3. அருள் விளக்கம்

அறிவுச் சுடரோ னருட்கதிரா லெங்கும்
நிறையு நிறைவை நினை, 1

ஞானஜோதியான இறைவன், அருளாகிய கதிர்களைப் பரப்பி, எங்கும் நிறைந்திருக்கிறான். அந்த நிறைவை எப்போதும் நினைக. உலகத்தில் தியானத்திற்கும் ஞானத்திற்கும் ஏற்ற பொதுப்பொருள் ஞாயிறு. கதிர்– அவன் - கதிரவன். சூரியன் தன் கதிர்களைப் பரப்பி உலகைச் சித்தரிக்கிறான், உலகிற்குப் பற்றற்ற சாட்சியாயிருக்கிறான். அவ்வாறு கடவுளும் பற்றற்ற சாட்சியாயிருந்து, அருட்சக்திக் கதிர்களால் எங்கும் நிறைந்திருக்கின்றான். இந்தப் பூரண நிறைவை எப்போதும் தியானிக்க வேண்டும். கற்கண்டில் இனிப்புப் போல, உயிர்களி லெல்லாம் சுத்த சச்சிதானந்த சக்தி நிறைந்திருப்பதை உணர்க.

தாக்கற்று நோக்குந் தனித்தலைவன் சந்நிதிக்கே
யாக்கன்முத லைந்தொழிலு மாம். 2

இறைவன் ஒப்பற்ற தலைவன்; எதிலும் பற்றில்லாது (தாக்கற்று), பொதுநிலைச் சாட்சியாக, உலகை நோக்குகிறான். அவனுடைய சந்நிதிமாத்திரத்தில் ஆக்கல், காத்தல், அழித்தல், அடக்கல், அருளல் முதலிய ஐந்து சிருஷ்டித் தொழில்களும் இயல்பாக நடக்கின்றன. கதிரவன் உதித்ததும் மொட்டு மலர்கிறது; தேன் ஊறுகிறது; வண்டுகள் உண்கின்றன. வாடிய மலர் உதிர்கிறது. உதிர் மலர் மண்ணாகிறது. அதே மண்ணிலிருந்து மறுபடியும் செடி

முளைக்கிறது. இவற்றிற்கெல்லாம் சூரியன் சாட்சியா யிருக்கிறான்; அவ்வாறே கடவுளும் பற்றற்ற சாட்சியா யிருந்து, சக்தியால் உலகை நடத்துகிறார்.

**ஒன்றெனவுந் தோற்ற மொடுக்கமதி லேயெனவுங்**
**கண்டவனே காட்சிக் கிறை.** 3

உள்ள பொருள் ஒன்று, அதன் அருட் சக்தியிலேதான் உலகம் தோன்றி வளர்ந்து முதிர்ந்து அடங்கி, ஒடுங்குகிறது. இதையறிந்து, முக்குண விகாரத்தைத் தாண்டி, எப்போதும் தனிப்பெரும் பொருளாகிய இறைவனை உள்ளே நினைத்து, உலகிலும் காண்பவனே காட்சி யறிவிற் சிறந்தவன் ; பிரத்தியட்ச ஞானி. அகங் கிளம்பினாற் சகம். அகமடங்கினாற் சுகம்.

**பிண்டத்தி லுள்ளான் பிரமாண்டத் திற்கோயில்**
**கொண்டுலவுந் தெய்வமெனக் கொள்.** 4

பிரம்மாண்டமாகிய பேருலகில் நிறைந்திருக்கும் சுத்த சக்தி இறைவனே, ஊன் பிண்டமாகிய இந்த உடலையும் கோயிலாகக் கொண்டு உலாவுகிறான். அந்த இறைவனை நம்புக. உடலுடையானே உலகுடையான். விசுவாத்மாவே உடலிலுள்ள சுத்தாத்மா; உடலையும் உலகையுங் கடந்த பரமாத்மா. சூரியனிடம் சுடராயுள்ள சுத்த சக்தியே, மனிதனுள்ளும் உயிர்க்குயிரான சுத்தாத்ம புருஷன் என்பதை நம்புக.

**நானென்ற மாயை நலிய நலியவுனைத்**
**தான்கொண்டு போற்றுமருட் டாய்.** 5

தாய் அருள் தனிப்பெருங் கருணையான சுத்த சக்தி, ஆன்மாவைப் படிப்படியாக மாசறுத்துத் தூயுறுத்துகிறது. அந்த அருட்சக்தி இறங்கி, ஆன்மாவை ஏற்றுப் போற்றுவதற்கு ஒரு சாதனம் உண்டு. அதுதான் "நான்" என்ற ஆணவமாயை நலிதல், ஆணவம் தேயத்தேய அருள்

ஓங்கும். "நான்" என்ற அகங்காரம் தேய்ந்து மறைந்தால், "தான்" என்ற உண்மைப் பொருள் எழுத்து நம்மைத் தாங்கி நடத்தும்.

## 4. வழிபாடு

நேசம் பதிந்துள்ளே நின்றுருகி, நெஞ்சாரப்
பேசினாற் பேசும் பிரான். 1

உள்ளே நேசம் பதிந்து, அன்புறவு ஊன்றி நின்று, ஆர்வத்தால் உருகி, நெஞ்சாரப் பேசினால், அருட்பிரானாகிய இறைவனும் "இதோ இருக்கிறேன்" என்று ஓங்காரமாகப் பேசுவான்.

அன்பு, ஆர்வம், நேசம், உருக்கம், உள்ளுறவு, உள்ளுணர்ச்சி, உள்ளறிவு, உள்ளொளி, உட்கலப்பு, உள்ளின்பம்—சித்தசுத்தியுடன் இறைவனுக்கு உள்ளே முறையிடுவதால், இன்பநிலைகள் மேன்மேலும் படிப்படியாக அனுபவமாகும்; "அருட்பரஞ்சுடரே! அகநாடகனே! அகத்திரை நீக்கி அறிவொளி காட்டாய்! கனியும் சுவையும், கனலும் ஒளியும், மலரும் மணமும், மதியும் நிலவும் போல இணை பிரியாது என்னுள் இருக்கும் இறைவா! என் உடல், உயிர், மனம், உள்ளம், அறிவு, இன்பம், உணர்வு, உண்மை, பேச்சு, நினைப்பு, முயற்சி, செய்கை எல்லாம் உன்மயமாகி, நின்னிச்சை புரிந்து, நின்னிற் கலக்க அருள். தூய்மை, வாய்மை, பொறுமை, அன்பு, அடக்கம், நேர்மை, உறுதி, ஆண்மை, அறிவு, தொழில்முயற்சி, அருட்பொலிவு இவற்றுடன் யோகத்தால் உன்னைக் கலந்து வாழ அருள். என் மனச் சாட்சியில் பேசி, என்னை நின்பால் நடத்து. உறங்கும் போதும் உள்ளத்தே துடிக்கும் சுத்தசக்தி இறைவா, நீயின்றி நான் இல்லை. உள்ளும் புறமும் உன்னோடு யானாக வாழவருள். என் பேச்சு உன் பேச்சு; என் மூச்சு உன் மூச்சு; என் இயக்கம் உன் இயக்கம். என்று நீ அன்று நான். நா நான் : சுவைப்பது நீ. கண் நான்,

காண்பான் நீ. என் எல்லாம் நீயாக வருள்—ஓம் சுத்தசக்தி பரமாத்மனே போற்றி!" என்று உள்ளே பேசி முறையிடுக!

அன்புண்மை யாக அமர்ந்த கடவுட்குன்
அன்புண்மை யால்வழிபா டாற்று. 2

இறைவனை வழிபடுவது எப்படி? இறைவன் அன்பு வடிவாக, உண்மைச் சுடராக, சுத்தான்ம ஜோதியாக உள்ளத்தில் உள்ளான். அவனை வழிபட அன்பு, உண்மை இரண்டே வழி. வழிபாடு என்றால் மனச்சாட்சியினின்று அந்தராத்மா பேசும் மெய்வழி பற்றி நடப்பதே, இறைவன் அருள்வழி நடப்பதே வழிபாடு. அன்புறவு, தூயவாழ்வு, உள்ளொருமை உண்மையுணர்வு—இவையே வழிபாடாம்.

பற்றற்றுப் பற்றிப் பணிந்துணர்வா லர்ச்சித்துத்
தொட்டுநில் : அஃதே துதி. 3

கடவுளைத் துதிப்பது எப்படி? 'எனது, யான்' என்னும் அகந்தைப் பற்றை நீக்கி, அந்தராத்மனையே பற்றி நிற்க வேண்டும். 'நான்' என்று கிளம்பும் மனம் உள்ளத்தானைப் பணிந்து படியவேண்டும். தியானத்தில் அறிவுணர்வால் அருச்சிக்க வேண்டும். நெஞ்சத் துடிப்பு சுத்தான்மாவைத் தொட்டு நிற்றல் வேண்டும். ஒவ்வொரு நெஞ்சத் துடிப்புடனும் இறைவனை நினைத்து, "அவனே எல்லாம்" என்று உணர்ந்து, அவன் அன்பையே பற்றி, மற்றப் பற்றுக்களைப் பாராட்டாதிருத்தாலே இறைவனை வணங்குவதாகும்; அதுவே துதியாகும். தியானமே தொட்டு நிற்பது; மோனமே பற்றிக்கலப்பது; சாந்தமே தன்னிலை யுறுதியாம்.

எனதென தென்ன லிடராகு மென்றும்
அவனது வென்ன அருள் 4

இந்த வழிபாட்டிற்கு இடராக நிற்பன "எனது, எனது" என்னும் ஆணவமே. இதுவே போட்டி பொறாமைகளுக்கும் பிரிவினைச் சண்டைகளுக்கும் காரணம். இந்த இடரை நீக்க

வழி என்ன? நாம் எதைக் கண்டாலும், அது அவனாகிய இறைவனே; :அவனே எல்லாமா யிருக்கிறான் என்று உணர்வதே. இந்த உணர்ச்சியால் ஆணவம் குறைந்து, அருள் பெருகும். எனது, யான் என்று இறுமாந்தால், மனமயக்கமும் வினை மயக்கமும் இன மயக்கமும், வாழ்வுப் படகைக் கவலைப் புயலில் அலைக்கும். அகந்தை ஒழிவதே அருள். இயற்றுவதெல்லாம் இறைவன் வழிபாடாகுக!

**தம்மைக் கொடுத்தோர்க்குத் தன்னையே தந்தருளும்**
**அம்மைப்ப னாணைவழி யாற்று, 5**

இறைவனை எப்படிப் பின்பற்றுவது? ஒரு பிள்ளை தனது அன்னை தந்தையின் நன்மொழிகளைப் பின்பற்றி முன்னேறுகிறான். இறைவன் உலகத் தந்தை. அவன் சக்தியாகிய திருவருள் உலகத்தாய். ஒவ்வொருவர் மனச்சாட்சியிலும் "இன்னது செய்" என்று இறைவன் ஆணையிடுகிறான். அந்த ஆணையின்படி கடமையைச் செய்வதே இறைவனுக்கு நாம் செலுத்தும் நன்றியாகும். தம்மை இறைவனுக்குக் கொடுப்பதாவது, சித்த சுத்தியுடன் அவனுக்கே வழிபாடாக வாழ்வதுதான். அப்படி தம்மையே கொடுத்தவர்க்கு இறைவன் தன்னையே தந்தருளுகிறான். அதாவது அவர்களுடைய மனிதக் குறைகளையெல்லாம் மாற்றி, தெய்வத் தன்மையாக்குவான். இதுதான் ஆட்படுவதும் ஆணை புரிவதும் ஆட்கொள்வதும் ஆகும்; இதுவே அடைக்கலமும் ஆகும்.

## 5. கடவுட்டன்மை

**மகிழ்விற் படைத்தளித்து மாற்றும் பொருளை**
**அகத்தூய்மை யாலே யறி. 1**

கடவுள் உயிர்களை எப்படிப் படைக்கிறார்? படைத்து என்ன செய்கிறார்? கடவுள் மெய்யறிவின்பம் (மகிழ்வு). அந்த இன்பத்திலேயே உலகைப் படைக்கிறார்; அந்த

இன்பத்திலேயே உலகம் வாழவேண்டிய எல்லாம் அளித்துக்காக்கிறார். ஆன்மா மறுபடியும் மெய்யறிவின்ப மயமாவகற்கே அதை மாற்றிப் படிப்படியாக மேலேற்றிப் பூரணப்படுத்துகிறார். இத்தகைய தெய்வப்பொருளை— சுத்தவஸ்துவை எப்படி அறிவது? அகக்தூய்மையால்— அந்தரங்கசுத்தியால். அசுத்தத்தினால் அஞ்ஞானம் வளருகிறது; அதனால் ஆன்மா தனது பரம்பொருளை அறியாமல் இருக்கிறது. சுத்தசாதனத்தால் மாசற்றுத் தெளிந்தால் இன்பப்பொருளை அறியலாம்—உணரலாம்— புணரலாம். அறிதலே ஆதல், உணர்தலே புணர்தல், புணர்தலே உவத்தல்.

**வாய்மை நலனோன்பு வன்றொன் டடக்கமிவை**
**தூயவனைச் சேருந் துணை.** 2

இறைவன் சுத்தபரமாத்மன்; அவனை அடையும் வழியும் பரம சுத்தமே. அந்தச் சுத்த நிலையை அடைவதற்குத் துணையாவன : வாய்மை, புண்ணிய நல்வினை, உள்தூய்மைக் கேற்ற தவவிரதம், மனித சமுதாயத்தைத் தெய்வீகமாக்கும் தீவிரமான அருட்பணிகள், திருவருளுக்குப் பணிந்து நடக்கும் அடக்கம், மனதையும் புலன்களையும் அடக்கி உட்குவிந்து தியானித்தல் (அடக்கம்) இவையே.

**மெய்யன்பு நல்லுறுதி மேதக்க வொப்புரவாந்**
**துய்யவுளத் தொண்டர் துணை.** 3

தொண்டர் இலக்கணம் என்ன? அவர்களுக்குத் துணை நின்று அருளை விளக்குவது எது? தொண்டர் துய்யவுளம் (அந்தரங்க சுத்தி) கொண்ட அறவோர். மெய்ப்பொருளாகிய இறைவனிடம் அவர்கள் அன்பு பதிந்திருக்கும். சுடரை ஒட்டியே விளக்கின் பயன். சுத்த ஜோதியான இறைவனை ஒட்டியே உலகின் பயன். அதுவே உயிர்க்குயிர் என்று அறிந்து, மெய்யன்பர் நல்ல

உறுதிகொண்டு, சித்தம் அலையாமல் நிறுத்தி மேலான பொதுநலத்தைச் (ஒப்புரவு) செய்வார்கள். துய்யவுளத்துடன், மெய்ப்பொருளன்புடன், நன்மன உறுதியுடன், சீரிய புண்ணியச் செயல்களைச் செய்பவர்களே திருத் தொண்டராவார். இவர்கள் உள்ளம் உலகளாவும்.

**காமம் வெகுளி கலக்கமி லாதமனச்**
**சேமமத னாலிறையைத் தேர். 4**

மெய்பொருளை மறைப்பன யாவை? காமம், சினம்(வெகுளி), மனத்தைக் கலக்கும் அச்சம் இவையே. இம் மூன்றையும் மேற்சொன்ன சாதனங்களால் நீக்கி, மனம் தூய்மையடைந்தால் அந்தத் தூய மனமே பெரிய பாதுகாப்பு அளிக்கும் (சேமம்). சுத்த மனதில் அருள் இறங்கும். அருள் அஞ்ஞானத்தை மாற்றி, மெய்ஞானத்தைக் காட்டும். மெய் ஞானத்தால் இறைவனைத் தேர்ந்தறியலாம்.

**உள்ளப் பொதுவெளியி லோங்கு மணிவிளக்கைக்**
**கள்ளமற வுள்ளுறவிற் காண். 5**

சுத்த பரமாத்மா, உயிர் உள்ளத்தில், அனைவருக்கும் பொதுவாக, வெளிப்படையாக விளங்குகிறது. அந்த உள்ளமே சிதம்பரம்—சித்தம்பலம் என்பது. அதில் மணி விளக்கைப்போல சுத்தஜோதி விளங்குகிறது அதைக் காண்பது எப்படி? கள்ளமற்ற உள்ளுறவினால். வஞ்சம், கரவு, பொய், ஆணவம், ஆசை, பொறாமையில்லாத நெஞ்சே கள்ளமற்ற தூய உள்ளம். அந்த உள்ளத்திலே தியானத்தினால் அந்தராத்மனுடன் இணைந்து நின்றால், சுத்தஜோதி புலனாகும். வெளியுறவாலும், புலன்கள் சங்கற்ப விகற்பங்களில் திரிவதாலும் சித்தம் சலித்து, இந்த உள்ளுறவைத் தடுக்கின்றன. அலைபுலனைச் சமநிலையில் நாட்டுக. திரையற்ற ஒளிக்கடல் போல். மனம் அமைதியுற்றால், அமுத கலசச் சுடர்போல் பரமாத்ம ஜோதி எழுந்து விளங்கும்.

# 2. உலகியல்

## 1. உலகாலயம்

உயிர்மேனி யாக்கொண்டே யோங்குமொரு சோதி
பயிலா லயமுலகு பார். 1

உலகை ஒரு கோயில்போற் காண்க. அந்தக் கோயிலில் ஒரு அருட்சோதி விளையாடுகிறது (பயில்கிறது). எல்லா உயிர்களும் அந்த அருட்சோதியில் இணைந்திருக்கின்றன. உயிர்களையே மேனியாகக் கொண்ட ஒளிமயமான சுத்த சக்தி ஜோதி உலகில் ஐந்தாடல் புரிகிறது. உயிரிற் கலந்த சுத்தாத்மாவே உலகில் சிற்பரமாக விளையாடும் விசுவாத்மா. உலகில் விளையாடும் விசுவாத்மாவே தற்பர நிலையில் பரமாத்மாவாக விளங்கும்.

ஆருயிர்கட் கோருயிரா யாங்காங்கு நின்றியங்கும்
பாரால யத்தானைப் பார். 2

உலக பரமாத்மா எப்படியிருக்கிறான்? உலகத்தில் உள்ள எல்லா உயிாகளுக்கும் அவனே ஒரே உயிராயிருக்கிறான். நாம் எங்கெங்கே பார்த்தாலும் அங்கங்கே அததுவாய் இருந்து விளையாடுகிறான். உலகே அவன் விளையாடும் கோயில். இப்படிக் காண்பதுதான் விசுவரூப தரிசனம்—உலகையே இறைமயமாகக் காண்பது.

விரிவா னுலகை விளங்கருளா லாடும்
பரமான்மா வாகவே பார். 3

விரிந்த வான் சூழும் உலகை பரமாத்ம மயமாகவே காண்க. அந்தப் பரமாத்மா தனது அருட்சக்தியால் பலவாறாக விளையாடுகிறது. ஒரே மின்சாரம் ஒளி. மணி, சூடு, வேகம் முதலிய பலவகையாக விளங்கி, பல தொழில்களை இயக்குவதுபோல், ஒரே பரமாத்ம சக்தி உலகில் பலவாக விளையாடுகிறது. இயற்கையுலகம் இயங்கும் கடவுள். அமருங்கடவுள் பரமாத்மா; ஆடுங் கடவுள் பாராத்மா.

உடலில் உயிர்க்குங் கடவுள் சுத்த ஜீவாத்மா.

**உலவுடலஞ் சிற்றுலகாம்; உள்ளத்தான் கோமான்**
**நிலவியல்பே நீதி நெறி. 4**

நடமாடும் உடல் ஒரு சிறிய உலகம். எல்லாம் ஐம்பூதத் தொகுப்பு. உடலில் இருபத்து நான்கு தத்துவங்கள் இருக்கின்றன:- ஐம்பூதங்கள், ஐந்து தன்மாத்திரைகள், ஐம்புலன்கள், ஐந்து வினைப்பொறிகள், அந்தக் கரணங்களுடன் ராஜஸ—தாமஸ—சாத்வீக குணங்கள் கூடி இயற்கையான உடலாகின்றன. இந்த உடலை இயக்கும் சக்தியே உயிரான திருவருள்; அதை நடத்துவது உயிர்க்குயிரான இறைவன். அவனையே புருஷன்—சுத்தாத்மன்—க்ஷேத்ரஜ்ஞன், உடலோன் என்பர். மனச்சாட்சியே அவன் அறநூல்.

**இயற்கையே யாக்கை; யிறைவனே யான்மா**
**உயிர்க்குலம் ஓர்தொடர்பென் றுன். 5**

இயற்கையாகிய ஐம்பூத சக்தியே யாக்கை. க்ஷேத்ரம் —பிரகிருதி, நிலைக்களன். அதை இயக்கும் சுத்தான்மாவே இறைவன்—அருளரசன்—க்ஷேத்ரஜ்ஞன். அவன் உயிர்க்குயிரா யிருக்கிறான். அதனால் எல்லா உயிர்களும் ஒரே தொடர்பான சுத்தாத்ம நிறைவே. தத்வமஸி (அது நீ) என்பது மகா வாக்கியம். தத்—அது; த்வம்—நீ; அஸி—ஆனாய். கோடி மின்விளக்குகளிலும் ஒரே மின்சாரம் ஒளிர்கிறது; அதுபோல் கோடிக்கணக்கான உடல் உயிர்களில் ஒரே சுத்தான்மாவே தொடர்ந்து விளையாடுகிறது. இந்த விசுவாத்ம பாவனையே சிறந்த வழிபாடாகும். உயிரிலும் உலகிலும் ஒருமயம் காண்பதே சமயோகமாகும்.

## 2. உலக நிலை

**உண்டில்லை யென்றோயாச் சண்டையேன்? உள்ளவரை**
**பண்டுலகிற் பாங்குற் றிரு. 1**

தத்துவவாதிகள் "உலகம் உண்டா இல்லையா; மெய்யா பொய்யா; கனவா நனவா? உலகம் இயற்கையா, இறைவன் படைத்ததா?" என்று ஓயாது வாதாடிச் சண்டையிடுகின்றனர். இந்த வீண்சண்டை ஒழிந்தால், பல மதவாதக் கூச்சல்கள் அடங்கிப் போகும். உலகம், உயிர், இறைவன் ஆகிய முப்பொருளும் என்றும் உள்ளவை. உலகம் நமக்கு முன்னே இருந்தது; நமக்குப் பின்னும் நீண்டகாலம் இருக்கும். உலகம் சக்தி விலாசம்; அருள் அரங்கம். உடலும் மனமும் உள்ளவரை உலகின் உறவும் இருக்கும். அது மாறிமாறி மன்னும். உள்ளவரையில் இந்தப் பழமையான உலகில் இயல்பாக வாழ வேண்டும். பாங்கு என்றால் நன்மை, சமரசம், அழகு, தகுதி, இணக்கம், ஒழுக்கம், அன்பு, தோழமை முதலிய தன்மைகளுடன் வாழ்வதாம், உலகம் பொய், மாயை, கனவு என்ற பேச்சேன்? இந்தப் பொய்வாதத்தால், சோம்பலும் போலித் துறவும் பெருத்து, முன்னேற்றம் தடைப்படுகிறது. வாழ்க்கை அநித்தியம் என்று உண்ணாமலிருக்க முடியுமா? ஒருநாள் இடிவதுதானே என்று வீடு கட்டாமலிருக்க முடியுமா? உலகம் ஆத்ம பரிபூரணத்திற்காகவே இறைவன் கொடுத்த நிலையம். இதைச் சரியானபடி பயன் படுத்த வேண்டும்.

வகுக்கு மனமயக்கால் வையத்தைக் காணேல்;
உகக்கு மொளியறிவா லுன். 2

மனம் இருவிகார மயக்கச் சுழல்; அதனால் உலகைக் காணாதே; மன மயக்கால் பார்த்தால் உலகம் பல வேறு பாடாகக் காணும்; பிரிவினையும், சுயநலச் செருக்கும் முனைந்தெழும்; மனங்கடந்த ஒள்ளிய அருளறிவால் உலகை நினை. உலகம் திருவருள் ஆடும் அரங்கமாகக் காணும்; இன்ப துன்பச் சுழலற்ற உள்ளமைதி தோன்றும்.

இருப்ப தொருபொருளே; யெல்லாம் மதுவே;
பிரிப்பதுபொய் மாயப் பிணி. 3

இருப்பது ஒரே பொருள். அதுவே தன் அருட்சக்தியால் எல்லாமாய் விரிந்தது. மனம் உட்குவிந்து உள்ளத்தில் லயித்து, உள்ளம் சுத்தான்ம சேதனத்தில் லயித்து, அருள் விழியால் நோக்கினால், இந்த ஒருமை நன்கு விளங்கும். உலகை ஜாதிமத நாடுநிற பேதமாகப் பிரித்து நோக்குவது பொய்யான மனமாயப் பிணியே. இந்த மனமாயத்தைத் தாண்டினால், அன்னமய விகாரமான சாதி-குல வேற்றுமையே தோன்றாமல், எல்லாரும் ஒன்றாக வாழலாம்.

ஆலுக்கும் பூசணிக்கும் ஆய்ந்து கனிகொடுத்த
ஞாலத்தான் வைப்பே நலம். 4

இயற்கை இறைவன் ஓரகமற்ற சமநோக்குள்ளவன். அவன் தனது படைப்பணிகளில் அததன் தேவைக்கு ஏற்றதைச் செய்திருக்கிறான். ஆலமரத்திற்குச் சிறிய கனிகளை வைத்திருக்கிறான்; பெரிய கனி வைத்தால் என்ன? அது காற்றில் அலைந்து விழுந்துடைந்து. கீழிருக்கும் உயிர்களை நோவுறுத்தும், பூசணிக்கொடி தரைமீதே படர்வதால், அதற்குப் பெரிய காயைக் கொடுத்திருக்கின்றான். ஞாலத்தானாகிய இறைவன் அளந்து வைத்த ஏற்பாடே எல்லாருக்கும் நல்லது. பிறரைப் பார்த்துப் பொறாமைப் படாமல், உள்ள மட்டில் மகிழ்ந்து, இறைவன் வைத்த அள்வில் வாழ்க.

மாறித் திரிந்து வளர்மன் னுலகினிலே
மாறாத வொன்றை மதி. 5

இந்த உலக வாழ்க்கை பலவிதமாக மாறி மாறி, பல தோற்றங்களாகத் திரிந்து, அறிவிற்கு அறிவு வளர்ந்து நிலவுகிறது. உலகத் தத்துவம் எப்போதும் நிலையானது; (மன் உலகம்). உலகக் காட்சிகள் மாறும். படத்திரை எப்போதும் உள்ளது; படக்காட்சிகள் அடிக்கடி மாறும். பல விகாரமான உலகில், என்றும் மாறாமல் நிர்விகாரியாயிருக்கும்

சுத்தான்மப் பொருளையே பொருள் என்று மதி. உலகம் முக்குணப் போர்க்களம்; அதில் பெயர், வடிவ, பேதங்களெல்லாம் அழிகின்றன. அவற்றை அணிந்து உலாவிய உட்பொருள் அழிவதில்லை. உலகம் ஐந்தொழில் நாடகம்; அதை மாசற்ற சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருக்கும் உள்ளத்தானே நீ என்று அறி. இந்த அறிவு நிலைத்தால், உலகில் நடக்கும் போக்கு வரவுகளைப் பற்றியோ, முக்குணப் போர்களைப் பற்றியோ, இன்பதுன்பச் சுழல்களைப் பற்றியோ கலங்காமல் உள்ளபடி இருக்கலாம்.

## 3. இயற்கை

**இயற்கையின் புத்தகமே யின்பாக நோக்கிற்**
**பயக்கு மறிவுப் பழம்** 1

இயற்கை நம்முன் விரிந்த பெரிய அறிவு நூல்; அதன் உள்ளத்தை ஆழ்ந்து நோக்கி ஆராய்ந்தால், அரிய பெரிய அறிவுக் கனிகளை அது தரும். பெருங் கவிகளும் அருட் புலவரும். இயற்கையின் வனப்பை ஆராய்ந்தே இறைவன் உண்மையை விளக்கினார்கள்.

பேசாது பேசிப் பெருநல் லறிவுணர்த்தும்
ஆசா னியற்கையே யாம். 2

இயற்கை, வாய் திறந்து பேசுவதில்லை; ஆனால் அது நமது மனத்தைத் திறந்து பேசுகிறது; அது மௌனமாகப் பேசுகிறது. உயிர், இறைவன், உலகம் ஆகிய முப்பொருளைப் பற்றிய உண்மையறிவை நமக்கு விளக்குகிறது. வாழ்வுக்கு நலமான பெரிய அறிவைத் துலக்குகிறது. இவ்வாறு இயற்கை ஓர் ஆசிரியன்போல் நமக்கு உதவுகிறது. காலையின் அமைதி, கதிரின் புன்னகை, மலரின் மகிழ்ச்சி, கனியின் இனிமை, மலையின் உறுதி, அருவியின் ஈகை, வானின் கருணை, புள்ளின் பாட்டு, பூமியின் பொறுமை இவையெல்லாம் நமக்குச் சிறந்த அனுபவ அறிவைத் தருகின்றன.

**கதிராற் கடன்முகந்து, கார்மேக நல்கி,**
**யிதஞ்செய் யியற்கையென் றாய்!** 3

உலகிற்கு இதஞ்செய்வது இயற்கை; சூரிய இயற்கை, தன் கதிர்க்கைகளால் கடலாவியை இழுத்து, கார்மேகங்களை நெய்து, வானமுதம் பொழிகிறது. அதனால் பயிர் செழித்து, உயிர் செழித்து, உலகு செழிக்கிறது.

**ஓசைப் படாம லொருகோடி யற்புதஞ்செய்**
**தேசுற்றாள் சித்தாடுந் தாய்.** 4

இயற்கை, அற்புதச் சித்து விளையாடும் எழில் பெற்ற அன்னை, அவள் ஓசைப்படாமல், ஆரவாரமில்லாமல் கோடி அற்புதங்களைச் செய்கிறாள். கதிரெழுச்சி, வான்மழை, காற்றோட்டம், பயிர் வளம், உயிர் வளம், இரவு பகலின் போக்கு வரவு, ஒரே நிலத்திலிருந்து பலவகை மலர்கனிகள் உண்டாவது பருவகால வட்டம் முதலியவை இயற்கை அற்புதங்களாம்.

**இயற்றுவ தெல்லா மியற்கையதைப் பற்றிப்**
**பயிற்றுக வாழ்வைப் பரிந்து.** 5

இயற்கை, இறைவன் அருள் விளக்கம். அதுவே உலகத் தொழிலெல்லாம் செய்கிறது. உயிர்களைச் செயலுக்குத் தூண்டுகிறது. இயற்கை வழியைப் பின்பற்றி வாழ்வைப் பண்புறப் பயிற்றினால் இன்புறலாம். இயற்கைக்கு இணங்கினால், அது நம்மைத் தாய்போலத் தாங்கி நடத்தும். இயற்கையை மீறினால், வாழ்வு இடர்ப்படும். இயற்கையை அறிந்து பணிந்தால், வாழ்க்கை நன்றாகும்.

## 4. உலகுயிர்

**ஒவ்வோ ருயிரும் உலகின் வினைக்கணியாய்த்**
**தெய்வம் படைக்குமெனத் தேர்.** 1

உலகாலயத்தில் ஏராளமான வினைகள் உள்ளன. ஒவ்வோர் உயிருக்கும் சிறப்பான ஒரு வினை அல்லது காரியம் உள்ளது. அதற்கு அணியாகவே,.. அதை நிறைவேற்றவே, இறைவன் அந்த உயிரை ஆக்குகிறான். உண்ணல், உறங்கல், ஈனல், பேணல் ஆகியவை எல்லா உயிர்களுக்கும் பொதுவினைகளாகும். இவற்றைத் தவிர, ஒவ்வோருயிருக்கும் சிறப்பாக வினை உண்டு. ஏசுநாதர், அன்புப்பொறுமையைச் சிறப்பாக விளக்க வந்தார்; சங்கரர், ஆத்ம ஞானத்தையும், குரு நானகர் சமரசத்தையும், மஹாத்மா சத்திய சக்தியையும் விளக்க வந்தனர், இப்படி ஒவ்வோருவரும் ஒரு சிறப்பான வினைக்கு அணியாக வருகின்றனர். அமைதியாக இருந்து, மனச்சாட்சியைத் தொட்டுப்பார்த்தால் அந்த வினை தெரியும்.

**வினைக்களவு தோற்றம்; விமலனரு ளாலே**
**யனைத்துயிரும் வீடடைத லாம்.** 2

சொந்தவினை, வந்தவினை என்று இருவினைகளுண்டு. தன் உடல் பாதுகாப்பிற்கும், குடும்ப வளர்ச்சிக்கும் ஏற்பட்ட மாமூல் காரியங்கள் சொந்த வினைகள். ஒவ்வோர் உயிருக்கும் ஒவ்வோர் அருட் புலமை உள்ளது; அதை வளர்த்து, உலகிற்கு உதவுதலே வந்த வினை, உயிர் வினை, ஜீவனவிரதம் ஆகும். வந்த வினையை அறிந்து, சித்த சுத்தியுடன் செய்யத் தொடங்கினால், இறைவன் அருள் மேன்மேலும் ஊக்கி நடத்தி, இடையே வரும் பந்ததொந்தங்களை யெல்லாம் அறுத்தெறிந்து, விடுதலை தரும்.

**போக்கு வரவற்ற பூரணனைக் கூடுதற்கே,**
**மீக்கூர்த்துச் செல்லுமுயிர் மேல்.** 3

வினை யுள்ளமட்டும் உயிருக்குப் போக்கு வரவு உண்டு. போக்கு வரவு இல்லாத பரிபூரணன் இறைவனே. அவனைக் கூடுவதே உயிரின் இன்பம், சுதந்தரம், விடுதலை,

அமைதி; இதற்காகவே உயிர் மேன்மேலும் அறிவு முதிர்ந்து, ஆணவம் தேய்ந்து, கூர்த்துச் செல்கிறது. கூர்த்தலாவது, பரிணாமப்படுதல், திருந்தித் திருந்தி மாசகன்று மேலோங்குதல். உயிர், கல்லில் உறங்குகிறது; புல்லில் உணர்கிறது; விலங்கில் ஐம்புலன் கொண்டு வாழ்கிறது. மனிதனில் மனங்கொண்டு நினைக்கிறது, மனமாசு அகன்று முக்குண விகாரமற்று, உள்ளத்தானைக் கலந்து நின்றால், வினைத்தளை உதிரும்; விடுதலை எய்தும், கட்டற்ற இறைவனைக் கலக்கலாம். ஜீவயாத்திரை, அருள்வழி பற்றி அறிவாலயத்திற்குச் சென்று, சுத்த பரிபூரண சச்சிதானந்தனைக் கூடி நிறைவு பெறுகிறது.

பெண்ணின்றி ஆணில்லை; ஆணின்றிப் பெண்ணில்லை;
எண்ணிருவர் சேர்ந்தே யிகம். 4

ஆண் பெண் சேர்ந்ததே வாழ்வு. ஆணில்லாமல் பெண்ணில்லை; பெண்ணில்லாமல் ஆணில்லை. அதனால் இருவரும் ஒரே உயிரின் இரண்டு தோற்றம். இருவரும் சரிநிகர்; கதிரும் கதிரவனும் போன்றவர். பெண், சக்தி, அன்பு, அருள், அழகு, எழில்; ஆண், அறிவு, வீறு, வீரம், வினைத்திறல்; ஆண் மூளை; பெண் உள்ளம். யோகம், போகம், சுத்த—முக்திஅனைத்தும் இருவருக்கும் சமவுரிமையே.

வேறுபா டெல்லாம் விகற்ப மனமயக்காம்
ஊறுபா டென்றே ஒதுக்கு. 5

மனிதனை மனிதன் வேறுபடுத்திப் பிரிப்பது மனமயக்கமே. மனம் நன்மை தீமை ஆகிய இரண்டு வேறுபாடுடையது. மனம், ஆசை யாணவத்திறன். இதுவே ஆன்ம முன்னேற்றத்திற்கு ஊறுபாடு, இடர். சாதி மத வேறுபாடுகள், மனத் தோற்றங்களே. மனவேறுபாடே இன வேறுபாடு; போட்டி பொறாமை அடிதடிகளெல்லாம் மனவேறுபாட்டின் ஆட்டமே; உள்ளுண்மை ஒன்றையே

பற்றி, மனவிகாரத்தை விடுத்தால், இடரில்லாமல் ஆன்மா முன்னேறி சுத்த சுதந்தர சமத்துவ சித்தி பெற்று நிலவும்.

## 5. உலக வாழ்வு

**தன்னியல் பாந்தெய்வத் தன்மை யறியாக்கால்,**
**என்னபய னிப்பிறவி யே?** 1

மனிதன் இயல்பு தெய்வத் தன்மையே. அது நீ; நீ தெய்வத் தன்மையன். தெய்வத் தன்மையை ஆசை யாணவாதி அசுத்த தன்மைகள் மறைத்துக் கொண்டிருக்கின்றன. வாய்மை, தூய்மை, அன்பு, அருள், அமைதி, அறிவு, தியானம், தியாகம், யோகம் முதலிய சாதனங்களால், அந்தரங்க சுத்தி பெற்றால், தெய்வநிலை புலப்படும். அதன் சட்டையே மானிடம். தெய்வத் தன்மையை அறிந்து அதுவாதலே மானிடத்தின் பயன். அஃதின்றேல் மனிதப் பிறவி வீணே.

**ஆட்சிபெற் றுள்ளே யகில விளையாட்டைக்**
**காட்சிபோற் கண்டு களி.** 2

உலகம் இயற்கையின் ஆடல். அதை ஒரு நாடகக்காட்சி போலக் கண்டு மகிழ்க. இந்தக் காட்சிக்குத் தன்னாட்சி, ஆத்ம சுயராஜ்யம் வேண்டும். இயற்கையின் முக்குணங்கள் கோடிக்கோடி உருவெடுத்து விளையாடுகின்றன. எல்லாம் மனவிகார நாடகங்களே. மனத்தை வென்றால் எவ்வித விகாரமும் இன்றி, உலகாடலைச் சாட்சியாகக் காணலாம். நரவேடம் பூண்ட அமரரே நாம்; நமது மெய்நிலைக்கு அழிவில்லை என்றுணரலாம்.

**எத்தனையோ காரியங்க ளிந்த வினையுலகில்;**
**அத்தனையும் ஆடலென லாம்.** 3

உலகம் எல்லையற்ற தொழிற்சாலை. இதில் அவரவர் குணங்களுக்கு ஏற்றபடி, கோடிக்கணக்கான காரியங்கள்

நடக்கின்றன. நன்மை தீமை, இன்பம் துன்பம் ஆகிய இரு விகாரங்கள் உலகில் விளையாடுகின்றன. இவை முக்குண இயல்பின் ஆடல் என்று அறிந்து, நாம் பற்றற்ற சாட்சியாயிருக்கவேண்டும். உலகம் திரை; முக்குணங்கள் படகாட்சிகளாக அதில் ஆடுகின்றன. திரையில் ஒளி வீசும் விளக்கே சுத்தாத்மா. அது சாட்சியாயிருக்கிறது. அதன் ஒளியில் பல நாடகக் காட்சிகள் ஓடி விளையாடுகின்றன. திரையில் புலி கரடி வந்தாலும் திருமண ஊர்வலம் வந்தாலும் விளக்கிற்கு ஒன்றுதான். அதே போல, உலகாடலுக்குச் சாட்சியாயிருக்க வேண்டும். நாடகம் பார்ப்பது போல் உலகையும் ஓர் இயற்கலை நாடகமாகப் பார்க்க வேண்டும்.

**வினையுலகை யஞ்சாத வீரன்போல் வெல்க**
**மனவுறுதி யாலே மகிழ்ந்து.** 4

உலகைப் பார்த்துத் தளராதே. வினையுலகை அஞ்சாதே. ஒரு வீரன் போர்முனையில் நின்று எதிரிகளை எப்படி வெல்கிறானோ, அப்படியே இருவிகாரப் போர்களத்தில் நிருவிகாரமா யிருந்து, முக்குண மாயத்தை வெல்க. அதற்கு வேண்டியது மனவுறுதியே. மனவுறுதி, துணிவும், மகிழ்வும், வினைத் திட்பமும் தரும். உலகில் அருளாட்சியை நிலைநாட்டி, இருளாட்சியை ஓட்ட வேண்டும். மனோஜயம் பெற்ற வீரர்கள் மனமாயத் துயர்களை ஒழிக்க வேண்டும். ஆத்ம சக்தியுடன் கூடிய கர்ம வீரர்கள், உலகை வென்று, அருளரசை நாட்டவேண்டும். உள்வெற்றியே உலக வெற்றி.

**அகிலவாழ் வத்தனையு மான்மவிரி வாக**
**நிகழுவதே யுண்மை நிறைவு.** 5

மனிதனின் உண்மையான நிறைவு, பிறவிப் பயன், என்ன? அவன் எப்படிப் பரிபூரணம் பெறுவது? முடிவில் பந்ததொந்தமற்ற சுத்தான்மாவாகவே தன்னைக் காண

வேண்டும். மனமயக்கங்கள் ஒழிந்த தூய அமைதி நிலையில், இந்தத் தற்காட்சி கிடைக்கும். தற்காட்சியால் தன்னாட்சி வரும்; தன்னறிவால் அச்சம் ஒழியும்; அறிந்தவன் எதற்கும் அடிமைப்படான். அவன் தனக்குத் தானே அரசன். "தான் எதுவோ, அதுவே, எல்லாம்; அதுவே உலகெல்லாம் நிறைந்தது" என்றறிவதே ஆத்ம விரிவு, அகண்டாத்ம தரிசனம், சாம்ராஜ்யம் ஆகும். தன் விரிவே உலகம். உலகம் ஆத்ம சமானம் என்றறிவதே வாழ்வின் நிறைவாகும். இந்த நிறைவினாலேதான் ஆன்ம ஒருமையும், சுதந்தரமும், எல்லையற்ற சமரசமும், பிறருக்கு இன்னல் இல்லாத அமைதியான தூயவாழ்வும், ஆண்டான் அடிமை, அரசன் குடி, எஜமான் சேவகன், மேற்சாதி கீழ்ச்சாதி, அந்த மதம் இந்த மதம் என்ற வேறுபாடின்றி, எல்லாரும் எல்லாருக்கும் வாழும் பொது நல வெற்றியும் உண்டாகும். எல்லாரும் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவரும் எல்லாருக்கும் வாழும் ஆத்மநேயத்தாலேதான், தனிச் செருக்கும் மதச் செருக்கும் ஒழிந்து, அருளுணர்வும் அருளாட்சியும் உலகத்தில் விளங்கும்.

# 3. அறவியல்

## 1. அறம்

தானு நிறைவுற்றுத் தன்னவரு மின்புறுதற்
கானவொழுக் காறே யறம். 1

உலகத்தில் மனிதனுக்கு இரண்டு கடமைகள் உண்டு. ஒன்று, தான் பரிபூரணம் அடைதல். மற்றொன்று தன்னவராகிய மானிடர் இன்புறச் செய்தல். இந்த இரண்டிற்கும் வழிகாட்டும் நல்லொழுக்கமே அறம் என்பது. வாழ்க்கை இரண்டு விதம்: ஒன்று தனி வாழ்க்கை; மற்றொன்று கூட்ட வாழ்க்கை. இரண்டும் நிறைவுற வேண்டும். தனது பூரண சக்தியைக் கொண்டு, சுற்றியுள்ள மனித சமுதாயம் பூரணம் பெற யோகி தொண்டு செய்ய வேண்டும். ஆத்ம சித்தி மலையூற்றுப் போன்றது; அகில சித்தி மலை யருவி போன்றது. பூரணம் பெறுக; பூரணம் புரிக. இதுவே அறம்.

மன்னு மனச்சாட்சி மன்னவன்சொல் என்னவென
வுன்னி நடத்த லுயர்வு. 2

நம் உள்ளம் அரியணை; அதில் மனச்சாட்சியாகிய மன்னவன் விளங்குகிறான். அவன் சொல்லுவது என்ன என்று நெஞ்சைத் தொட்டு அறிந்து, ஆராய்ந்து நடப்பதே உயர்ந்த அறமாகும். மனச்சாட்சி எப்போதும் உண்மையே பேசும்; அறத்தையே போற்றும். அதர்மத்தைக் கண்டிக்கும்.

'இவ்வழிச்செல்' லென்றொன்றுள் ளெச்சரிக்கை செய்யுமே
அவ்வழியி லச்சமறச் செல். 3

நம் உள்ளே நுட்பமான ஒரு பொருள் "இந்த வழியே போ; அந்த வழியே போகாதே" என்று அடிக்கடி எச்சரிக்கை செய்து, நம்மை நடத்துகிறது. அந்த மனச் சாட்சி காட்டும் வழியே சன்மார்க்கம்—மெய்வழி. எதற்கும் அஞ்சாமல், அந்த நல்வழியிற் செல்க. பொய், திருட்டு, வஞ்சம் இவற்றை

யெல்லாம் மனச்சாட்சி பலமாகக் கண்டித்துத் துயர் செய்யும், மனத்துயரே குற்றவாளிக்குக் கடுமையான தண்டனை. நல்ல வழியில் நடந்தால் மனச்சாட்சி மகிழ்ந்து, நம்மை ஊக்கும். தனக்கு உண்மையாக நடத்தலே தரும சாதனம்.

**அறமென் றறிந்ததனை யஞ்சாது செய்மின்;**
**இறைவனருள் காக்கு மினிது.** 4

மனச்சாட்சி "இதுவே அறம்" என்று சொல்வதை அறிக. அந்த அறத்தை உடனே செய்க. உலகே எதிர்த்தாலும் அஞ்ச வேண்டாம். மனச்சாட்சிக்கு உண்மையாக நடக்கும் அறவோரைத் திருவருள் பாதுகாக்கும். அறியா மக்கள் எவ்வளவு இடர் செய்தாலும் அறவோர் அஞ்சார்; தளரார். ஆண்டவன் தோன்றாத்துணையா யிருந்து அவர்களைக் காப்பான். இந்த உண்மையை ஏசுநாதர், முகம்மது நபி, அப்பர், காந்தி, முதலிய பெரியார் வாழ்க்கையிலே காண்கிறோம்.

**இறந்தபின் னெப்படியோ; ஈங்கண் ணுலகிற்**
**சிறந்த திருவினையைச் செய்.** 5

அறத்தை நாமே, நமது கண்முன்னே நிறைவேற்ற வேண்டும். நாம் இறந்தபின் எங்கே செல்வோமோ, என்னகதி யாவோமோ, எப்பிறவி வருமோ அறியோம்.. நமது மக்கள் செய்யும் சிரார்த்தாதி கர்மங்களும் நமக்குப் பயனாவது சந்தேகம். மண்ணுலகில் நாம் இருக்கும்போதே உலகில் திருவும் அறிவும் அமைதியும் இன்பமும் ஓங்கும் அறவினைகளைச் செய்யவேண்டும். அதுதான் அறவழியாகும். உடலிலிருந்து உயிர் போன பிறகு, பிறர் செய்யும் தான தருமங்களெல்லாம் பசுவை ஒட்டக் கறந்த பிறகு கன்றை ஊட்ட விடுவது போலாகும். கன்றுக்கு ஒரு சொட்டுப்பாலும் இராது. எவன் அறம் செய்கிறானோ அவனுக்கே பலன் உண்டு. அவனவன் வினையை அவனவன் அனுபவிக்க வேண்டும். அப்பன் வினையைப் பிள்ளை

அனுபவிக்க முடியாது. வீட்டுக்கு, நாட்டுக்கு, உலகுக்கு, உயிருக்கு, கலைக்கு, ஒற்றுமைக்குப் புரியும் எல்லாப்பணிகளும் புண்ணியங்களே. உதாரணமாக பசுக்காத்தல், தொழிற்சாலைகள் நாட்டி ஏழைகளுக்கு உழைப்பும் பிழைப்பும் தருதல், நோய் தவிர்த்தல், கல்வி யளித்தல், சன்மார்க்க உபதேசம் செய்தல், நன்னூல்களைப் பரப்புதல், யோகம் பயிற்றல்—முதலியவை சிறந்த திருவினைகள் ஆகும். இறக்குமுன் அறவினை செய்க.

## 2. அற விரிவு

**யாதொன்று காலத்திற் கேற்றபொது நன்மையதை**
**வாதின்றி யாற்றி மகிழ். 1**

காலத்திற்கு ஏற்ற பொதுநலத்தைச் செய்து மன மகிழ்க. அப்படிச் செய்வதில் கட்சி வாதம் கூடாது. தர்மம் இருவகை; ஒன்று ஆத்ம தர்மம்; எல்லாருக்கும் இது பொது. மற்றொன்று யுக தருமம். இது அந்தந்தக் காலத்திற்குச் சிறப்பாக அமையும். இரண்டு தருமத்தையும் போற்ற வேண்டும். காலத்திற்கு உதவாத பழைய மாமூல்களை யெல்லாம் விட்டு, முன்னேற்றத்திற்கு உரிய பொது நலத்தை வெற்றியுறச் செய்ய வேண்டும். உதாரணமாக அக்காலத்தில் இருந்த நால் வருணம் இக்காலத்திற்குப் பயனில்லை. மனிதனுக்கு மனிதன் எவ்வகையிலும் தாழ்வில்லை, அடிமையில்லை; எல்லாரும் சரிநிகரான ஆன்ம நேயர்களே என்ற கொள்கை இக்காலம் விளங்குகிறது. வறுமை, மடமை, அடிமைப் பிணிகளை ஒழித்து, சுத்த சுதந்தர சமத்துவ சத்திய வாழ்வைத் தரும் செயல்கள் எல்லாம் இக்காலத்திற்கு ஏற்றவை. தனியுடைமை, பொதுவுடைமையாகி, பொதுவுடைமை அருளுடைமையாதலே இக்கால் நிறைவேற்றமாகும். மனச்சாட்சி வழியே நடப்பது எக்காலத்திற்கும் பொதுவான அறமாகும்.

**பழமை பழமையெனும் பல்லவியே பாடேல்;**
**புதுமை புதுமையெனப் போ. 2**

"பழைய வழக்கம், பழைய ஆசாரம்" என்ற மாமூல் பல்லவி வேண்டாம். வாழ்க்கை, புதுப்புதுத் துறைகளில் முன்னேறுகிறது. புதுமை புதுமை என்று புதிய புதிய நலங்களைப் பெற முன்செல்க. பாசி பிடித்த பழைய தேக்கம் பயனில்லை. புதுப்புது அருவிகளுடன் சலசலத்தோடும் ஜீவநதி போன்றது வாழ்க்கை. அந்தக்கால ராம பாணம் இந்தக்கால அணுகுண்டை எதிர்க்க முடியாது. தீக்குச்சியை விட்டு இப்போது சக்கிமுக்கிக் கல் தட்டிக் கொண்டிருக்க முடியாது. காகிதம், பேனா பரவிய காலத்தில், ஓலை எழுத்தாணிக்கு வேலை யில்லை. இந்தக் காலத்திற்கு ஏற்றபடி புதிய கலை ஆராய்ச்சியும் பொதுநலத்தொண்டும் வேண்டும். வானொலி, விமானம் முதலிய சாதனங்களால் உலகம் ஒன்றாகி வருகிறது. இனி வேற்றுமைத் தடைகள் நீங்கும். எல்லையற்ற ஆத்ம சமத்துவ வாழ்விற்கு நாம் புதிய உணர்ச்சியுடன் காலவேகத்தைப் பற்றி முன்னேற வேண்டும். காலத்திற்கேற்ற நாகரிகம் வேண்டும்.

மோகமய மின்றி, முரணற்ற முன்னேற்றம்
நாகரிக மென்றே நவில் 3

நாகரிகம் என்றால் என்ன? முரணற்ற, சாதி மத நிற மனமோக விகாரங்களில்லாமல், அன்பும், அறிவும், ஆன்மவுணர்வுங் கொண்ட முன்னேற்றமே நாகரிகம் என்க. பிற்போக்கும், பிடிவாதமும், பழமைச் செருக்கும், வீண் இடம்பமும், மன மயக்கமும், இன மயக்கமும், போட்டி பொறாமைகளும், மண் வெறியும், பொன் வெறியும், காமக் களியாட்டங்களும், குண்டு வீச்சுகளும் அநாகரிகமாகும். உயிர்க்கருணை, அறவொழுக்கம். அருட்பணி, அன்பு, அறிவு வளர்ச்சி புலனடக்கம், சமுதாயத்திற்கு நன்மையான புதுமைச் செயல்கள்—இவையெல்லாம் நாகரிகமாகும். சீரிய தன்மையும், நேரிய ஒழுக்கமும், கருணை உள்ளமும், கற்று நடத்தலும், அழகணி எளிமையும், அஞ்சா நெஞ்சும்,

இடைவிடா உழைப்பும், ஈகைச்சிறப்பும், வாய்மையுந் தூய்மையும் நாகரிகமான நடைமுறைகள் ஆகும்.

**தொடர்ந்தார் துயரந் துடைக்காத செல்வன்**
**கடமை வழுவியோன் காண்.** 4

நாகரிக முள்ள மனிதன். தனக்கு மட்டும் வாழ்வதில்லை. மனித சமுதாயம் முழுதும் ஆன்மத் தொடர்பு. தனது தொடர்பான உயிர்க்குலத்திற்கு மனிதன் நலம் புரிவது கடமை. உயிர்களுக்கு உற்ற துன்பத்தை, தனக்கு வந்த துன்பம்போலக் கருதி நீக்கவேண்டும். அப்படி நீக்காதவன் தன் கடமையினின்று வழுவியோன் ஆவான். பிறரைத் தானாக மதித்து இன்னலைத் தீர்த்தல் நாகரிகச் செல்வனுக்கு அழகாகும்:

**எதுதீ தெனநோக்கி யெள்ளற்க; நன்மை**
**யதுபோற்ற லாற்ற லறிவு.** 5

நாகரிக மனிதன் எப்படி நடக்க வேண்டும்? பிறரிடம் எது தீது, குறை என்று எப்போதும் நோக்கி அவர்களை இகழக்கூடாது. குறை எல்லாரிடமும் உண்டு. பிறரிடம் என்ன நன்மை யிருக்கிறதோ அதை அறிந்து போற்றி, அந்த நன்மையை நாம் செய்தலே அறிவாகும். குறை பேசாதே; பிறரிடம் இருக்கும் குறை உன்னிடம் இல்லாமல் திருத்திக்கொள். பிறர் நன்மையை நீ அறிந்து பின்பற்று. இதுவே அறிவாளிக்கு அழகாகும். நடந்து காட்டலே நல்லறச் செவ்வி.

## 3. அறத் தகுதி

**போக்கும் வரவும் பொழுதுமறி யோமதனால்**
**யாக்கையோ டேசெய் யறம்.** 1

உடலும் உயிரும் சேர்ந்தது வாழ்வு. உடலும் உயிரும் பிரிந்தது சாவு. உயிர் எப்போது உடலை உதறிச் செல்லும், எப்போது மறுவுடல் எடுக்கும் என்பதை நாம் அறியோம்.

உயிரின் போக்கு வரவு ஊகத்திற்கு எட்டாதது. நேற்று இருந்தவரை இன்று காணோம். திடீரென்று போர் கிளம்பி, கோடிக்கணக்கான மக்களைக் கொல்லுகிறது. உலகரங்கில் நவரஸக் காட்சிகளுடன் விதி நடனமாடுகிறது. காலத்தின் மாயம் கணக்கில் அடங்காது. ஆதலால் உடல் உள்ள போதே செய்யவேண்டிய நல்லறத்தைச் செய்க.

**உண்ண வுடுக்க வுவந்திருக்க நன்முயற்சி**
**பண்ணல் அறவாழ்வின் பண்பு.** 2

செய்யவேண்டிய அறம் என்ன? மனிதன் முதலில் உயிரைத் தாங்கும் உடலைப் போற்ற வேண்டும். உண்டு உடுத்து ஒரு வீட்டில் வசித்து வாழ்வின் கடமையைச்செய்து இன்புற வேண்டிய நல்ல முயற்சிகளை யெல்லாம் செய்தல் அறவழி வாழ்வின் மாண்பாகும். அறவோர், யாரையும் பிச்சை கேட்கக்கூடாது, எல்லாரும் உழைத்தே பிழைக்க வேண்டும். உடலுக்கு வேண்டிய தேவைகளை ஒரு நல்ல தொழிலால் அடைய வேண்டும். இன்றேல் வறுமையும் சிறுமையும் கவலையும் மனிதனைப் பற்றிக்கொள்ளும்.

**சோர்வு விடுத்துச் சுயேச்சை யடைந்துலகில்**
**வீரனாய் வாழ விரும்பு.** 3

மனிதன் செய்ய வேண்டிய அடுத்த அறம், உலகில் பொதுநல வீரனாய் வாழ விரும்புவதே. அதற்கு மனச் சோர்வை விட்டு, எல்லாக் கட்டுகளினின்றும் விடுதலை பெற வேண்டும். மனிதனுள் மனிதன் ஆத்மவீரன்; உடல் அவன் சட்டையே. அவனுக்கு அச்சம், கவலை, கட்டடிமை, தளர்வு, தோல்வி இல்லை. தன்னறிவு, உலகறிவு, உள்வெற்றி, உலகவெற்றி, மனத்திட்பம், வினைத்திட்பம், அஞ்சாப் பொறுமை, ஆண்மை, அன்பு, தியாகம் முதலியவை வீரர் குணங்கள். உயிரைக் கொடுத்தும் அறத்தைத் தாங்கல், சுயநலத்தை விட்டுப் பொதுநலங் காத்தல், ஆத்ம தீரம்— இம்மூன்றும் வீரர் தன்மையாகும். புத்தர், சங்கரர், அப்பர்

போன்றோர் ஞான வீரர்; சிவாஜி, குரு கோவிந்தன், இளஞ்செழியன் போன்றோர் கர்ம வீரர்; மகாத்மா காந்தி பக்தி, கர்ம வீரர், வீரத்திருவினர், பார்நலக் காவலர்.

**உலகோ ரருட்குலமா யொன்றியினி தோங்க**
**நலமார் பொதுநிலையை நாட்டு.** 4

மனிதனுக்கு உரிய அடுத்த அறம் பொதுநிலைத் தொண்டு. அதாவது, சாதிமத பேதமில்லாமல் சர்வாத்ம சமரச உணர்ச்சியில் உலகோரெல்லாம் ஒரே அருட்குலமாக ஒன்றுபட்டு இனிது தழைக்கும் சமயோக வாழ்க்கை. இந்த வாழ்க்கையினாலே தான் உலகத்திற்கு எல்லா நன்மையும் உண்டாகும். எல்லா உயிர்க்கும் இறைவன் ஒருவனே; எல்லா உடலும் இறைவன் ஆலயமே. எல்லார் வாழ்க்கையும் ஆன்மத் தொகுதியே. எல்லார் உள்ளமும் சுத்தான்மத் துடிப்பே. இதை உணர்ந்தால் சாதி மத நாடு நிற மொழி வேறுபாடின்றி, எல்லாரும் ஒரே அருட் குலமாக வாழலாம். திருவருளின் துடிப்பாகிய சுத்தான்ம உணர்ச்சியில் ஒன்றுபட்டு வாழ்வதே அருட்குலவாழ்வாகும்.

**உள்ளொளியிற் பூத்த வுயிர்வாழ்விற் சாதிமதச்**
**சள்ளையிலை சச்சரவுந் தான்.** 5

மேற்சொன்ன பொதுநிலை வாழ்விற்குத் தடையா யிருப்பன சாதி மதச் சள்ளைகளே. இவை, ஒன்றைப் பலவாகக் காட்டும் மனவிகாரங்களே. உயிரினங்களெல்லாம் ஒரே சங்கிலித்தொடரே. எல்லா உயிர்வாழ்வும் திருவருளாகிய உள்ளொளியிற் பூத்த பெரிய தாமரை போன்றவை. ஒவ்வொரு ஜீவனும் அதன் இதழே. பொகுட்டில் இதழ்கள் ஒன்றாவதுபோல், உள்ளான்மாவில் உயிர்கள் ஒன்றி நிற்கின்றன. இந்த ஒன்றிப்பை அறிந்தால், பிரிவினை உணர்ச்சி யில்லாமல், பேத புத்தி யில்லாமல், எல்லாரும் சேர்ந்து வாழலாம். இந்த ஆத்ம ஐக்கிய வாழ்வில், மன விகாரத்தால் உண்டாகும் சள்ளை சச்சரவுகள் இல்லை. ஒரு

மாலையில் கோத்த மணிகளைப்போல் எங்கும் ஒருமயமான சுத்தான்ம உணர்வில் எல்லார் வாழ்வும் பொருந்தி நிற்கும்.

## 4. அற நெறி

விண்ணின் விரிந்த வியன்செய் யறநூலின்
உண்மை யுடுவி னுறும். 1

(உடு நட்சத்திரம்). அறநூல், வானைப்போல விரிந்தது; அதில் ஏராளமான இயலுண்மைகள் நட்சத்திரங்களைப் போல விளங்குகின்றன. உலகில் எழுந்த கீதை, பைபிள், குறள், அருட்பா முதலிய பெரியார் வாக்குகளெல்லாம் எல்லையற்ற இயற்கை அறநூலின் சில வரிகளே யாகும். கால தேசத்திற்கு ஏற்றபடி அருளாளர் உள்ளத்தில் அறநூல் உண்மை அரும்பும்.

அன்புண்மை யின்சொ லடக்கம் பொறுமையருள்
இன்பப் பொதுநெறியென் றெண். 2

அறநூல் எல்லா மனிதருக்கும் எல்லா உயிர்களுக்கும் பொதுநெறியை வகுக்கிறது. அன்பு, கடவுளன்பு, ஆருயிர் அன்பு; மனச்சாட்சிக்கு இசைந்தவுண்மை; வஞ்சம், சூது, பொறாமை யில்லாமல் பிறருக்கு நலந்தரும் இன்சொல்; செருக்கும் இடம்பமும் தற்புகழ்ச்சியும் இல்லாத அடக்கம்; சினமும் பொருபொருப்பும் இல்லாது, நன் முயற்சிகளில் உறுதியான பொறுமை; எல்லா உயிர்களிடமும் கருணையும் இரக்கமும் சமநோக்குங் கொண்ட அருள்; திருவருள் வேட்கை—இவையே அறநூல் சொல்லும் பொதுநெறி. இந்தப் பொதுநெறி பேரின்பம் அளிக்கும்.

கொலைபுலை, கூத்தி, குடிகளவு, சூதாம்
வலிய நரக வழி. 3

அறத்திற்கு எதிரான மறம்—தீமை, ஆறாகும்; உயிர்க்கொலை, புலாலுண்ணுதல், வேசை யுறவு (விபசாரம்), கட் குடி, களவு, சூது—இவை ஆறும் மனித வாழ்வை நரக

வேதனையாக்கும். போர்வெறிக் கொலை உலகின் அமைதியைக் கெடுக்கும். உயிரைக் கொன்றுண்ணல், மனதைக் கொலைக்குத் தூண்டும். கொன்று உண்பவனிடம் அன்பு, அருள், அமைதி, பொறுமை முதலிய சாத்விக குணங்கள் இருப்பது அரிது. தீனி போலே மானிடன். மனிதன் உணவு மரவகை. வேசை யுறவால் வறுமை, கலக்கம், மயக்கம், பிணி, துயர்கள் உண்டாகும். காமவெறிகளை மனிதன் அடக்கியாளவேண்டும். பரத்தை முயக்கம் இருட்பிண முயக்காம். கள், விஸ்கி, பிராந்தி, காப்பி, தேயிலை, புகையிலை, சுருட்டு எல்லாம் மதியை மயக்கி நரம்பைத் தளர்த்தும் நஞ்சுகள். பிறருக்கு உரியதை வஞ்சனையாக அபகரித்தல் களவு; பிறர் மனைவி, பிறர் பொருள், பிறர் நாடு, பிறர் உழைப்பு, பிறர் செல்வம் ஆகிய எதைக் கவர்ந்தாலும் களவேயாகும். கள்ள மனத்திற்கு உள்ளே சவுக்கடி. சூது சகுனி வலை, சீட்டு, பகடை உருட்டல், குதரைப் பந்தயம், வீண் அரட்டை—எல்லாம் சூதாட்டமே. வீண் வம்பு வாய்ச் சூதாகும். இந்த ஆறு தீமைகளையும் அறவே நீக்க வேண்டும்.

வசைசின வஞ்ச வழக்கற்றுத் தீய
நசையற்று நாணுற்று வாழ். 4

மனிதன் தீமை யில்லாது எப்படி வாழ வேண்டும்? மனிதனுக்கு அணி நாண். அதாவது அடக்கம், பண்பு, மட்டு மரியாதை, பிறர் பழியும் தன் பழியும் அஞ்சல், வெட்டெனப் பேசாமை, நாய்ச்சினம், நரி வஞ்சம், பாம்புச் சீற்றம், புலி யகங்காரங்களின்றி, நோகாது, நோவுறுத்தாது, இதம்பதமாக நடத்தலே நாணுறலாகும். வசவு, வம்பு, தூற்றுதல், கோள், சினம், சூது, பொறாமை, வஞ்சம், துராசை (தீய நசை), அழிவழக்கு—ஆகிய தீயகுணங்களால், மனம் கெடும்; நரம்பு தளரும்; ஆயுளும் ஆற்றலும் கெடும். நாகரிகத்தின் நல்லுயிர் நாணே.

**மூவழுக்கு நீங்குகவே, முத்தூய்மை யோங்கிநர**
**தேவர்குலம் வாழ்க செழித்து !** 5

தர்ம சாதகன் மனமொழி மெய்களில் மாசில்லாது ஒழுகவேண்டும். மனத்தைக் கெடுப்பன : மோகவெறி, மாயா பாசம், தன்னல அகந்தை ஆகிய மூன்று அழுக்குகளே. இவற்றை மாற்ற, முத்தூய்மை வேண்டும். அதாவது : தூய நினைப்பு, தூய வாய்மை, தூய அருட்பணி. சுத்தமானால் பெத்தம் ஒழியும்; முத்தி வளரும். அதனால் மனிதர் குலம் தேவர் குலமாகச் செழித்து வாழும். இறைவன் அருளால், அகப்புறத் தூய்மையும், தன்னறிவும், தவக்கனலும். சமநோக்கும், தருமவீரமும், கருமவீரமும், மாசறு தூய்மையும், தேசுறு யாக்கையும், அகக்களிப்பும், உயிர்க் கருணையுங் கொண்ட நரதேவர் வாழ்க!

## 5. பொதுநலம்

**பிறர்க்கென வாழும் பெரியோரே சேர்வார்**
**துறக்கத்துங் காணாச் சுகம்.** 1

மனிதர் காண விரும்பும் சுகம் சுவர்க்க போகமே. (துறக்கத்துச் சுகம்). அதைவிட ஒரு பெரிய சுகம் உள்ளது; அதுவே சுயநலமற்றுப் பிறருக்கு நன்மை செய்து வாழும் பொதுநல இன்பமாகும். அந்த இன்பத்தையே பெரியார் சேர்வர். அதனால் அவர்களுக்குச் சுவர்க்க போகத்தைவிட இனிய மனக்களிப்பு உண்டாகும். ஓர் ஆற்றின் இன்பம் பயிர்களையும் உயிர்களையும் ஊட்டுதல்; ஒரு விளக்கின் இன்பம் எண்ணெயுந் திரியும் குறைந்தாலும், பிறருக்கு வெளிச்சந் தருதல். கார்மேகத்தின் இன்பம் உலகம் செழிக்கப் பொழிதலே; சுத்த முக்தனின் இன்பம் தன் யோக சக்தியால் உலகிற்கு நன்மை செய்தலே.

**எத்துணை நன்றெண்ணி யிவ்வுலகிற் கன்புசெயல்**
**அத்துணை யான்மவிரி வாம்.** 2

உலகிற்கு அன்பு செய்யச் செய்ய, உள்ளான்மா உலகான்மாவாக விரியும். எவ்வளவுக்கெவ்வளவு நன்மையே எண்ணிப் பரோபகாரம் செய்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு நாம் பலர் உள்ளத்தில் குடிகொள்ளுகிறோம். மனிதன் உள்ளன்பு, மனைவி, மக்கள், சுற்றம், நண்பர், வீடு, ஊர், நாடு, உலகம் இவற்றை அளாவி, மேன்மேலும் ஓங்க வேண்டும். நாம் எதுவோ அதுவே உயிர்களும் உலகும் ஆகும். தன்னை யறிந்தால் அன்னியமில்லை. பார்க்குமிட மெல்லாம் பரம்பொருள் மயமே. மேகம், மழை, ஊற்று, ஆறு, குளம். கடல் எல்லாம் கடலாவியின் உருவங்களே. அதுபோல் உலகுயிர்க ளெல்லாம் நம்முயிர்த் தொடர்பே. பிறர் பசி தன் பசி; பிறர் துயர் தன் துயர்; பிறர் இன்பம் தன் இன்பம் ; பிறர்க்கு உதவி, தனக்கு உதவி யாகும். அன்புப் பெருக்கால் ஆன்மப் பெருக்காம்.

**ஈசன் அருண்மொழியை யெவ்வினத்தார் சொன்னாலும்.**
**ஆசையுடன் கேட்ப தறிவு. 3**

பொதுநல அறிவு சமநோக்குடையது; அதற்குச் சாதி மத பேதமில்லை. அருட்புலவர் வாக்கெல்லாம் அந்த ராத்மாவான ஈசன் அருளும் திருமொழிகளே. அதை எந்த இனத்தார் எம்மதத்தார் சொன்னாலும், ஆசையாக ஆர்வமுடன் கேட்டு நிற்பதே சமரச ஞானமாகும். உள்ளப் பரமனே எல்லா வேதங்களும் தேடும் பொருள். பைபிள், குரான், ஜெந்தவஸ்தா, திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, தாயுமானவர், திருவருட்பா, கீதை, உபநிடதம், வேதம், ஆகமம் முதலிய எல்லா அருள் நூல்களும் பரமாத்ம ஞானத்தையே பேசுகின்றன; சுத்த முக்த சமத்துவ சித்தியைக் கோருகின்றன. மத பேதமின்றி அவற்றை ஆராய்ந்து உண்மை யறிந்து நடக்க வேண்டும். சர்வமத சமரசமே சர்வாத்ம சமரச மாகும்.

**அற்பம் பெரியதென் றெண்ணாம லன்புசெயு**
**நுட்ப வறிவுடைமை நோன்பு. 4**

சமநோக்கே நல்லறிவு; அதுவே நோன்பு. அந்த நோன்பிற்கு அன்பு செய்தலே சாதகம். அற்பம், பெரிது, சிறியர், பெரியர் என்றெண்ணாமல் சமநோக்குடன் நுட்பமாக அறிந்து பலருக்கும் நன்மையான பொதுநலங்களைச் செய்தல் சிறந்த விரதமாகும். அன்பு, ஒருமை இரண்டும் நுட்ப அறிவிற்கு அடையாளமாகும். புல் முதல் புமான் வரையில், எல்லா உயிர்களும் ஒன்றே. நமது பசிக்கு உண்பதுபோல, பயிருக்கும் உரமும் நீரும் ஊட்ட வேண்டும்.

> **கீண்மேற்பிறரொடுதான் கேண்மைதெவ் வொன்றெனவே**
> **காண்போன் கருணைக் கடல்.** 5

கீழோர் மேலோர், பிறர் நாம், நண்பன் பகைவன் என்ற வேற்றுமை யில்லாமல், எல்லா ஆன்மாக்களும் தன் ஆன்மா போலவே ஒன்று என்று காண்பவனே கருணைக் கடலாவான். கருணையே மனிதத் தன்மையின் உச்சம். அன்பின் தீவிரமே அருட்கருணை. பகை நட்பு, கீழ் மேல் என்பன வெல்லாம் மனவிகாரத்தால் வருவன. சமநோக்கும் சமநெறியும் இருந்தால், ஏழை செல்வன், வலியன் மெலியன், தன்னவன், அன்னியன், கீழ்ச்சாதி, மேற் சாதி, நண்பன், பகைவன் என்ற இருவிகாரத்திற்கே இடமில்லை. உலகாடலில் நமக்கு எதிர்க்கட்சியில் ஆடும் நண்பனையே பகைவனாக நினைக்கிறோம். வழிதவறிய நன்மையே தீமை. அடி சருக்கிய இன்பமே துன்பம். தன்னைக் கண்டால், தானே உலகம். இந்த அறவழியே அறிவிற்கு வழியாகும்.

# 4. அறிவியல்

## 1. அறிவு

அறவின்பம், வாழ்வி னழகின்ப மெல்லாம்
அறிவின்ப ஊற்றி னமிழ்து. 1

அறத்தால் இன்பம் உண்டாகும். அதில் அழகின்பம் பொலியும். ஆனால் அழகான அறவாழ்விற்கு அறிவின் இன்பம் வேண்டும். அறிவின்பம் வற்றாத அமுத ஊற்று. இந்த ஊற்றின் அமுதமே, அறவாழ்வின் அழகுப் பயிரை வளர்த்து உலகை இன்பமாக்கும். அறிவின்றி அறமில்லை. அறமின்றி அழகில்லை. அழகின்றி வாழ்வில்லை. வாழ்வின்றி இன்பமில்லை. வாழ்வுக் கலையை வளர்ப்பது அறிவின் அருவி. அதனாலேதான் இன்பக்கனி விளையும். அறம் மலர்; அழகு நிறம்; அறிவு கனி; அற விளக்கின் சுடர் அறிவு. மனிதன் தன்னாட்சியும் உலகாட்சியும் பெற வேண்டும். தன்னாட்சிக்குப் பொறிபுலன்களை அடக்கித் தன்னறிவு பெறவேண்டும். உலகாட்சிக்குக் கல்வி கேள்விகளால் கலையறிவும், அனுபவத்தால் உலகறிவும் பெறவேண்டும்.

எங்குற்றோ மென்னசெய லெங்கேக லென்றறிவோன்
கங்குற் கடல்கடந்தோன் காண். 2

அறிவாளர் தங்களை மூன்று கேள்விகள் கேட்டுக் கொள்ளுகிறார்கள்: (1) எங்கிருந்து வந்தோம்? (2) எதற்காக, என்னசெய்ய வந்தோம்? (3) வாழ்க்கை நாடகம் முடிந்ததும் எங்கே செல்கிறோம்? இந்தக் கேள்விகளுக்கு அனுபவ விடை அறிந்தோனே அஞ்ஞானக்கடலைக் கடந்து, அறிவின்பம் பெறுவான். நான் உலகில் இருக்கிறேன்; உலகம் நானில்லை. நான் வீட்டில் இருக்கிறேன்; வீடு நான் இல்லை. நான் உடலில் இருக்கிறேன்; உடல் நானில்லை. ஆனால் இந்த உடலில் ஒரு காரியத்திற்காக இருக்கிறேன். உடல்,

உயிர், மனம், வீடு, உலகம்—இவை மறையினும் நான் இருக்கிறேன். உடல் வினைச்சட்டை; அதைப் பூண்டு உலகமேடையில் நடிக்கிறேன். உலக நாடகத்தில் எனது பங்கு முடிந்ததும் வெளியேறுகிறேன். நான் எடுத்த வினை வேடத்தைச் சரியாக நடிக்காவிட்டால் மறுபடியும் பழகி, மேடைக்கு வருகிறேன். உலகம் ஒருபரிட்சைகூடம். நான் எழுதவேண்டிய பரிட்சையில் தவறினால், மீண்டும் படித்து அதே இடத்திற்கு வரவேண்டியதே. சுத்தான்மா, தான் வந்த வினையை முடித்தால், வினையற்றுத் தன்னை யறிந்து, தனக்குத் தலைவனான பரமனைக் கலக்கும். ஒவ்வோர் உயிருக்கும் தனிப்புலமை உண்டு. அதைக் கொண்டு வாழ்வை நிறைவேற்றினால் முத்தி பெறலாம். போக்கு வரவு செய்வது வினையுடலே. வினையறிந் தாற்றினால் விடுதலை பெறலாம். "இறைவன் அருளால் வந்தேன்; இறைவன் அருட்பணி புரிந்தேன்; இறைவனைக் கலந்தேன்" என்பது என் கதையே.

> **போக்குவர வற்ற பொருளான்மா; நானதுவென்**
> **றேக்கமற் றின்புற் றிரு.** 3

மனிதா! நீ எப்போதும் இன்புற்றிரு. அதற்கு, ஏக்க மற்று அச்சம் கவலை தளர்வற்று, உள்ளத்தில் உள்ளபடியிரு. உள்ளத்தில் உள்ள அது, நித்திய நின்மல சுத்த சுதந்தராத்மா; அதற்கு போக்கு வரவு இல்லை; இறப்பும் பிறப்பும் இல்லை. இளமை, முதுமை, இன்பம், துன்பம், இறப்பு, பிறப்பு போக்கு வரவு எல்லாம் வினையுடலுக்கே. ஆடை கிழிந்தால் ஆளுக்கென்ன? பழையது கிழிந்தால் புதியது பெறுவோம். உடல் போனால் உடல் வரும். உள் மனிதன் என்றுமுள்ள சுத்த சச்சிதானந்தப் பொருள். அதையே "அது நீ ("தத்வமஸி "); ("ஸோஹம்") நான் அவன்; ("ஓம் தத் ஸத்") ஓங்காரமாகிய அதுவே உண்மை; "சுத்தோஹம்" என்ற மந்திரங்களால் அருட்பெரியார் குறித்தனர்.

**யானு முலகு மறிவுண்மை யின்பமயம்;**
**ஏனோ வெருவ லினி? 4**

மனிதா! ஏன் அஞ்சுகிறாய்? இனி வெருவாதே, அஞ்சாதே; கவலாதே, கலங்காதே. நானும் உலகும் அறிவு, உண்மை. இன்ப மயம்; ஸச்சிதானந்த மயம். எனக்கு இன்பமே யொழியத் துன்பமில்லை. நான் எதுவோ, அதுவே உயிருலகம். என்னைக் கண்டு நான் அஞ்சுவதில்லை; நான் ஏன் உலகைக் கண்டு அஞ்ச வேண்டும்? பிண்டத்தில் உள்ளதே அண்டத்தில்; சத்தில் உள்ளதே சகத்தில். உள்ளான்மாவே உலகான்மா என்று நினை. கண்ணாடி பார்த்த நாய்போல், உன்மயமான உலகைப் பார்த்து மருளாதே. ஆட்டு மந்தையில் வளர்ந்த சிங்கம்போல் அஞ்சாதே. உன் சொரூபத்தை அறி; இயல்பா யிரு; அதுவே இன்பம்.

**நம்பு, நினைமுயல்; நாடொருமை; ஞானமாம்**
**இன்பம் பெருகு மினிது. 5**

ஞானப்பொருளான ஆத்மாவே இன்பம். அந்த இன்பம் பெறுவதற்கு முதலில் நம்பிக்கை வேண்டும். பிறகு அதையே நினைக்க வேண்டும்; பிறகு அதை அடைய யோகப் பயிற்சியால் முயலவேண்டும். "நான் சுத்தான்மா" என்ற நம்பிக்கை உறுதியாக உறுதியாக, நினைப்பு அதிலே நிலைக்கும்; அதுவே தாரணை. மனம் புறத்தே செல்லாமல், உள்ளத்தில் படிந்து முத்துக் குளிப்பது போல் ஆழ்ந்து தியானத்தில் லயித்தால், ஆத்ம ஞானம் சித்திக்கும். உள்ளே லயிக்க லயிக்க அருட்காந்தம் நம்மைக் கவர்ந்து, உண்மைப்பொருளில் நாட்டும். இந்த நிலைவந்தால், தன்னால் இன்பம் பெருகும்.

## 2. கல்வி

**அறிவு தொழிலொழுக்க மாண்மை யழகாந்**
**திறமான கல்வித்திரு. 1**

அறிவு—அருளறிவு, கல்வி யறிவு என்று இருவகை யாகும். உலக வாழ்விற்குத் திறமான கல்வி வேண்டும். அந்தக் கல்வியே அளவற்ற செல்வமாகும். அதனால் வாழ்வு திருவோங்கும். நல்ல கல்வியின் இலக்கணம் என்ன? அது தன்னறிவையும், நூலறிவையும், உலகறிவையும் பெருக்க வேண்டும். வறுமையற்று வாழ உலகிற்கு நலமான தொழிற்பயிற்சி தரவேண்டும். உலகுடன் பழகி வாழ்வை உயர்த்த நல் லொழுக்கத்தைப் பயிற்றவேண்டும். எதிர்ப்புகளை வென்று முன்னேற உடலுறுதி, மனவுறுதி, வினைத்திறமை, அஞ்சா வீரம் முதலியவற்றைக் கொண்ட ஆண்மையைத் தரவேண்டும். இசை, காவியம், ஓவியம் போன்ற அருங்கலைகளால் வாழ்வை அழகு செய்ய வேண்டும். மூளைப்படிப்பு மட்டும் போதாது; உள்ளப் பயிற்சியும் வேண்டும். கல்விக்குக் கலையும் இலக்கியமும் கண்ணெனத் தகும்; ஒழுக்கம் உளமெனத் தகும்; ஆற்றல் உடல்; அழகு வடிவம்; ஆத்மஞானம் உயிர்; தொழில், நரம்புகள் எனத் தகும்.

இயற்கைவளத் தோங்கி, யியற்புலனைத் தூண்டும்
இயற்கைநெறிக் கல்வி யினிது. 2

கல்வி எப்படி இருக்கவேண்டும்? அது இயற்கைவழியே அமையவேண்டும், கலாசாலை, இயற்கை யழகு பொலியும் இடங்களில் அமையவேண்டும். கல்வி முறை இயல் புலமையைத் தூண்டி, உள்ளிருந்து அறிவை மலரச்செய்ய வேண்டும். கல்வி உள்ளிருந்து கெல்லப்படுவது; புறத்தினின்று உள்ளே திணிக்கப்படுவதில்லை. ஒவ்வோர் ஆத்மாவும் அறிவு நிலையம். ஒவ்வொன்றிற்கும் ஒரு புலமையுண்டு. அந்தப் புலமை மலர்ந்து விளங்கத்தக்க சூழலும் பயிற்சியும் வேண்டும். ஆறு, மலை, சோலை முதலிய இயற்கை வனப்புகளில் பிரமசரிய குருகுலங்கள் அமையவேண்டும். வான், கதிர், மதி, விண்மீன், மேகம், மின்னல், மலை, ஆறு, வயல், மலர் வனப்பு, புட்கள், பசுக்கள்

இவையெல்லாம் இயற்கையின் அறிவு நூல்கள். இந்த இயற்கை நூலே கவிகளும் முனிவரும் கற்ற அறநூலாகும். மாணவன் உள்ளத்தினின்று கேள்விகளாலும் காட்சிகளாலும், பயிற்சிகளாலும், ஊகத்தாலும் உண்மை உதிக்கவேண்டும், தோட்டம் போட்டுச் செடிநூல்; உயிர்களைக் காட்டி உயிர்நூல்; ஊர்களைக் காட்டிப் புவிநூல்; தியான வழிபாடுகளால் சமய நூல்; பேச்சாலும் எழுத்தாலும் இலக்கியம் புகட்டவேண்டும.

**ஆற்றல் மிகப்பெருக்கி யாளாக்குங் கல்வியினைப்**
**போற்றுக வீரர் பொலிந்து. 3**

உள்ளும் புறமும் வீறுபெற்று ஆற்றலை மிகவும் வளர்க்கும் கல்வியே கல்வி. அதுவே மனிதனைக் காலத்திற்கேற்ற ஆளாக்கும். அத்தகைய கல்வியை நாட்டு வீரர்கள் பொலிவுறப் போற்றுக! ஞான வீரம், தர்ம வீரம், கர்ம வீரம் ஓங்கவேண்டும். வீடு, நாடு, உலகம் இவை நலமுற மனிதன் வாழ வேண்டும். நாட்டிற்கு வீர தீரரும், ஆத்ம தீரரும் வேண்டும்; கலையும் தொழிலும் வல்ல புலவர் வேண்டும். இயற்கைப் புலமை மலர்ந்து, ஆற்றலும் அறிவும் அருளும் பெருக வேண்டும். அடிமைத் தளையை அறுத்து, மடமையிருளை ஓட்டி, வறுமைத் துயரை மாற்றி, வீரமும் அறிவும் தொழிலும் அருளுங் கொண்டு மனிதன் வாழவேண்டும். இதைத் தருவதே ஆளாக்குங் கல்வி.

**மெய்க்கு மறிவிற்கு மேன்மை யுறுதிதராப்**
**பொய்க்கல்வி யாலென் புகழ்? 4**

உண்மையான கல்வி உடலுக்கும் அறிவிற்கும் மேன்மையான உறுதியைத் தரவேண்டும்; இன்றேல் அது பொய்க்கல்வி யாகும். அதனால் என்ன சிறப்பு (புகழ்) உண்டாகும்? உள், புறம், இரண்டையும் நிறைவாக்குவதே கல்வி. உடல் ஆதாரம்; ஆத்மா ஆதேயம். இரண்டும் தரையும் நீரும், விளக்கும் சுடரும் போன்றவை. உடல் உயிர் தாங்கிய

சுத்தான்ம மந்திரம். உடலுறுதி உள்ளுறுதியாகும். நோயும் சோம்பலுங் கொண்ட உடல் தனக்கும் சுமை; உலகிற்கும் சுமை; பலமின்றி நலமில்லை. உடல் வலிமையுடன் அறிவும் திண்மையுற வேண்டும். அறிவில்லாத பலம் இன்பமளிக்காது. அது காட்டு விலங்குகளின் பலம்போல் பண்பற்றுப் போகும். அறிவும் உடலும் தக்க பயிற்சிகளால் திண்மையுறுவது கல்வியின் நோக்கமாகும்.

**ஈகையு ளீகையா மின்கல்வி; பெற்றவனுக்**
**கேகுழி யெங்கு மிசை.** 5

உலகத்தில் பல தான தருமங்கள் உண்டு. அவற்றுள் சிறந்த ஈகை, நல்ல கல்வி யறிவைக் கொடுத்தலாகும். அதைப் பெற்ற புலவனுக்கு அவன் செல்லுமிட (ஏகுழி) மெல்லாம் புகழோங்கும். அந்தப் புகழுடன் கல்வி கொடுத்தவன் புகழும் விளங்கும். கண்ணைத் திறக்கும் கல்வி யளித்தலே புண்ணியத்திற் புண்ணியம். செல்வத்தின் பயன் கல்வி யளித்தலே. குருகுலம் அமைத்தல், குருவைப் போற்றல், நன்னூல் வெளியிடல், பிரமசாரிகளை ஆதரித்தல், காலத்திற்கேற்ற கலை வளர்த்தல்—இவை யெல்லாம் கல்வியறமாகும்.

## 3. கற்ற பயன்

**கற்ற வழியாற்றக் கற்றோனே கற்றோனாம்:**
**மற்றவன் கற்ற மடம்.** 1

கல்விக்கு அழகு நல்லொழுக்கம். கல்வியை வாழ்ந்து காட்ட வேண்டும்; கற்ற வழியே நிற்க வேண்டும். அப்படி நிற்கப் பயின்றவனே கற்றவனாவான். கல்வியை உள்ளே செரித்து வாழ்வில் ஊறச் செய்து உலகிற்குப் பயனாக்க வேண்டும். கற்ற வழி நிற்காதவன் கல்வியின் பயனைப் பெறாத மூடனாவான். வேதம் படித்தும் வேசை மோகமும், தேவாரம் படித்தும் திருட்டுப் புத்தியும், திருவாசகம்

படித்தும் பொறாமைச் செருக்கும், திருக்குறள் படித்தும் வஞ்சத் திமிறும் உள்ளவன் ஆற்றிற்குப் போய் சேற்றில் மூழ்கினவன் போலாவான். அறிவிற்கு அழகு அனுட்டானம்.

அருளற்ற நெஞ்சில் அடைத்தநூற் குப்பை
பொருளற்ற வெற்றுரையைப் போலும். 2

அருளே மனிதன், அருளே அப்பர்; அருளே புத்தர்; அருளே கிறிஸ்து, அருளே இன்பம். அன்பும் கருணையும் பக்தியும் சேர்ந்தது அருள். அருளில்லாத நெஞ்சில் அடைந்து கிடைக்கும் புத்தகக் குப்பை, பொருளில்லாது வதவத வென்று பிதற்றும் வீண் பேச்சைப் போலாகும். அருளே கற்பதன் பொருள்; நெஞ்சு, அருளின் நிலையம். அருளில்லா மனம் இருள் வீடாகும். அதில் எவ்வளவு தங்கச் சாமான்கள் வைத்திருந்தாலும் அவை காலில் இடறிக் காயப்படுத்தலாம். அறிவின் விளக்கு அருள்; அருளைத் தேடி, அருளைப்பாடி, அருளைக் கூடி, அருளின்பம் பெறுக. அருள் வழி வாழ்க!

புலனைவென் றோனே புலவனாம்; பாட்டாற்
கலகலப்போன் பேச்சுக் கடை. 3

மனப்பாடத்தை விட மனப்படிவே அறிவாகும். அடக்கமே அறிவிற்கு அழகு. நூறு பாட்டுகளைப் பாடம் பண்ணி வைத்துக்கொண்டு கலகலவென்று வாய்முழக்கம் செய்து தற்புகழிலும், பிறரைத் திமிராக இகழ்வதிலும் காலத்தை வீணாக்குவோன் பேச்சுக்கடை போடும் வீணன் ஆவான். நாப்பறையைவிட, நன்னடையே சிறந்தது. ஐம்புலன்களையும் வென்று அடக்கினவனே புலவன். மனங் குவிந்து, மமதை யற்று, உள்ளே ஊன்றி, உண்மை யறிந்து, அருள்வழி நடப்போன்—அவனே புலவன். மனம் ஆத்மாவில் படிவதே படிப்பு.

வெள்ளத் தனைய விரிநூ லளந்தாலும்
உள்ளத் துணர்வே யுயர்வு. 4

வெள்ளமாக விரிந்துகிடக்கும் அச்சு நூல்களை மூளையில் எவ்வளவு அளந்து கொட்டினாலும் பயனில்லை. உள்ளத்தில் ஆத்மானுபவத்தால் எழுந்த அருளுணர்வே மிகவும் உயர்ந்தது. உள்ளந் திறப்பதே உண்மைக் கல்வி; ஆணவம் அறுவதே அறிவு. உள்ளமே அறிவின் ஊற்று. மலர்ந்த உள்ளமே, மலர்தலைக் காலை போல அருள் மணம் வீசும்.

**கல்வியும் வாழ்வும் கவியுஞ் சுவையும்போற்**
**புல்லுவதே செல்வப் பொலிவு.** 5

சொற்சுவை பொருட்சுவை அருட்சுவை ஆகிய இம்மூன்றும் பண்ணுடன் பொருந்தியதே கவி; சொல்லடுக்கு மட்டும் கவியாகாது. படிப்பு மட்டும் கல்வி யாகாது. கல்வி, வாழ்வில் படிந்திருக்க வேண்டும். கவியுஞ் சுவையும் போல் கல்வியும் வாழ்வும் இணைந்திருக்க வேண்டும். அதனால் அறிவு, அருள், அழகு, சாந்தம், சிவம், மங்களம், வாய்மை, தூய்மை, முயற்சி, காரிய வெற்றி, பொருள் நிறைவு ஆகிய செல்வங்களெல்லாம் செழித்துப் பொலியும்.

## 4. ஆசான்—சீடன்

**ஆசா னருளு மழிவில் லறிவொளியே**
**காசினிக் காகுமுளக் கண்.** 1

உலக வாழ்விற்குக் கண் போன்றது அறிவு: புறக்கண் புறப்பொருளையே பார்க்கும்; உளக்கண் உள்ளுண்மையைக் காணும்; உள்ளறிவைத் தூண்டும். இந்தக் கண்ணைத் திறப்பவனே நல்லாசிரியன். அவனே அழியாத அறிவொளியை அருளுகிறான். அந்த அறிவொளியே, உள்ளும் புறமும் அறிய, உலகிற்கு அகக் கண்ணாய் உதவுகிறது. உள்ளறிவு, உலகறிவு, நன்னடை, நல்லுரை, நற்செயல் நன்னினைவு, பரந்த நோக்கம், தாயுளப் பரிவு, அறிவுத் திறமை, போதனா சக்தி, ஆத்மஞான சித்தி—

இவையே நல்லாசானுக்கு உரிய தகுதிகளாகும். ஆசான் அறிவொளி தேச விளக்காம்.

**வானும் விளைநிலனும் வாரிதியும் வெற்பும்போல்,**
**ஞானகுரு செய்யு நலம்.** 2

ஆத்ம ஞானத்தையும் உலக ஞானத்தையும் புகட்டும் குரு எல்லையற்ற நன்மை செய்கிறான். வானம், காற்றும் மழையும் ஒளியும் கனலும் தருகிறது. ஆசான், அருளும் கலையும் ஒழுக்கமும் பயிற்றுகிறான். விளைநிலம், உழைப்பிற்கு ஏற்ற பலனைத் தருகிறது; பயிர்களுக்கு ஆதாரமா யிருக்கிறது. நிலத்தைப் போலப் பொறுமையுடன் மாணவன் கருத்திற்கு ஏற்ற அறிவை ஆசான் அருளுகிறான். கடல், ஆழச் செல்லச் செல்ல முத்தும் மணியும் பவளமுந்தரும். எல்லையற்ற அறிவுள்ள ஆசான், ஆழ்கடல் போன்று அமைதியா யிருக்கிறான்; மாணவன் பணிவுடன் ஆழ்ந்து கற்கக் கற்க, ஞானத்தை அள்ளிக்கொடுப்பான். கடல் ஆவியைத் தந்து மேகமாக்கி மழை பொழிவதுபோல் ஆசான், மதிப்பொலிவுள்ள மாணவனுக்கு அறிவு, ஆற்றல், அன்பு, அருள் - புகட்டி அவன் வாழ்வு செழிக்கச் செய்வான். ஆசான், மலைபோலத் தன்னறிவில் நிலைத்திருப்பான். மலைவளம்போலக் கலைவளந் தருவான். மலையருவி போல அருளறிவு தந்து உலகை வளஞ் செய்வான். சிற்பி சிலை வடிப்பதுபோல், உடல், உயிர், மனம், உள்ளம், ஆன்மா அனைத்தையும் ஒளியுறப் பூரணமாக்குவான் ஆசான். வான் போல் அறிவு, மழைபோல் கருணை, நிலம் போல் வளமை, நேரிய ஒழுக்கம், தராசு போல் நிதானம், மலர் போல் புன்னகை, தாய் போல் உள்ளம், தந்தை போல் பரிவு இவற்றைக் கொண்டவனே நல்லாசான்.

**நாட்டிற் பெருந்தகையா னாளைவீ ரற்கறிவை**
**யூட்டினான் பெற்றாரி னூங்கு.** 3

ஆசிரியன் பெற்றோரைவிடச் சிறந்தவன்; பெற்றோர் ஊனுடலைப் பெற்றனர். கிள்ளைக்கு ஞானந்தந்து

ஆளாக்குவோன் ஆசிரியன்; அவனே நாட்டில் பெருந்தகை யாளன். பெரும் புகழுக்கும் மதிப்பிற்கும் உரியவன். நாளை வரும் வீரர்களுக்கு அவனே அறிவை ஊட்டினான். இன்று குழந்தை, நாளை மனிதன்; இன்றைச் செடி, நாளை மரம்; இன்றைச் சிறுவர் இனிவரும் பெரியார். குழந்தை ஓர் குட்டி யுலகம். அதனுள் கண்ணன், புத்தன், ஏசு, அப்பர், சிவாஜி, காந்தி போன்ற பெரியார் தன்மைகள் பொதிந்து கிடக்கின்றன. அவற்றைக் கண்டுபிடித்து, இயற் புலமையைத் தூண்டி, மாணவனை ஆளாக்குவோன் ஆசான். வருங்கால வீரர், அறிஞர், கலைஞர், முனிவர் ஆகிய சிறிய பெரியோருக்கு என் வணக்கம். இவர்கள் வாழ்வை அழகு பொலிய நிறைவாக்கும் உயிர்ச் சிற்பியான ஆசிரியருக்கு வணக்கம். அடித்தல், மிரட்டல், இடித்தல், வைதலின்றி, மலர்ச்சியுடன், அன்புடன், அருளுடன், அறிவைத் தூண்டுவோனே ஆசான்.

அழகுநிறை யாசானுக் கன்புடைமை யீந்து,
பழகிடலே நல்லறிவின் பண்பு. 4

அறிவழகும், குணவழகும், நன்னடை யழகும், சொல் லழகும், பொருளழகும் சேர்ந்தவனே ஆசான். அவனுக்கு அன்புடன் தனக்கு இயன்ற காணிக்கையும் தந்து, உடல், பொருள், ஆவியெல்லாம் நிவேதித்து, வேறு சிந்தனையின்றி, ஆசான் தரும் நல்லறிவை ஸாதனம் செய்தலே கல்வி கற்கும் பண்பு. மாணவனுக்கு அன்னை, தந்தை, நண்பன், இறைவன் எல்லாம் ஆசானே. மாணவன் பிரமசரிய விரதங்கொண்டு, ஆசான் ஆணைவழி நின்று தொண்டும் அன்பும் கருத்துங் கொண்டு, ஞானம் பயில வேண்டும். ஆசிரியனுக்கு வேண்டிய தேவைகளைத் தட்டின்றிச் சமுதாயம் தரவேண்டும். ஆசிரியர் குடும்பக் கவலை யில்லாமல் கல்விப் பணி செய்ய வேண்டும்.

நாடிப் பணிந்தோதி, நற்சேர்க்கைத் தொண்டுடனே
சீடன்மெய்க் கற்றல்சிறப்பு. 5

மாணவன், ஆசிரியனை நாடிச்சென்று வணக்கமுடன் கல்வி கற்கவேண்டும்; படிந்து நடப்பதே படிப்பு; மாணவன் நல்ல தோழருடன் சேர வேண்டும்; குரு சேவை கருத்துடன் செய்து, மெய்யறிவைக் கற்று நிற்கவேண்டும். இது தான் சிறந்த கல்வி முறை—குருகுலக் கல்வி முறை. பழக்க வழக்கம், பேச்சு, நினைவு, ஒழுக்கம், உறவு அனைத்திலும் மாணவன் தூயவனா யிருக்க வேண்டும். இளமைப் பழக்கம் இறுதி மட்டும் விடாது; ஆதலால் மாணவனுக்கு நல்ல சேர்க்கை, நற்பழக்கம் வேண்டும். புலனடக்கம், புனித நன்னடை, அயரா முயற்சி, ஆத்ம சிந்தனை, அறிவுத்தாகம், தன் இயல்புக்கேற்ற கலைப் புலமை—எல்லாம் வளர்க்க வேண்டும். யோகக் கலையும், காலத்திற்கேற்ற உலகக் கலைகளும், இயற்கைக் கலையும், தொழிற் கலையும் மாணவன் பயில வேண்டும். அப்போதே கல்வி நிறைவுறும்.

## 5. கலை வளர்ச்சி

**போற்றுக தாய்மொழியைப் பொன்போற் புறநயங்கண்**
**டேற்றுக நாளு மெழில் 1**

ஒரு நாட்டை ஆக்குவது மொழி. ஒவ்வொரு நாடும் அதற்குறிய தாய்மொழியைப் பொன் போலப் போற்றுக. ஆனால் "தன் மொழியே பெரிது" என்று தற்புகழக்கூடாது. பிறமொழிகளின் நயங்களையும் தேர்ந்து ஆராய்ந்து தாய் மொழியில் கொண்டு சேர்த்து அதற்கு எழில், ஒளி, மாற்று ஏற்றுக; தாய்மொழி தங்கம். அதில் பிறமொழி நயங்களையும் நவமணிகள் போல நாட்டலாம். தன் இரைப்பை யினாலேயே உணவைச் சீரணிப்பது போலவே, தாய் மொழியால் அறிவை வளர்க்க வேண்டும். காலத்திற்கு ஏற்றபடி ஒரு மொழி எளிய தெளிந்த நடையுடன் ஜீவநதி போலச் சலசலத்தோட வேண்டும். ஒவ்வொருவருக்கும் தாய்மொழி, நாட்டு மொழி, உலக மொழி ஆகிய மூன்றும் தெரிய வேண்டும். தமிழர் தமிழ், ஹிந்துஸ்தானி, ஆங்கிலம் ஆகிய மூன்றையும் பயில வேண்டும்.

அருளறிவி லூறி, யழகிற் றவழ்ந்து,
பொருள்செழித்த பொற்கவியைப் போற்று! 2

கவிகளே காலக்குயில்கள்; நாகரீகச் சிற்பிகள்; கலையூற்றுக்கள். உண்மைக் கவிகளை உலகம் அறிந்து போற்ற வேண்டும். உண்மைக் கவி எது? உள்ளத்தில் இறைவனுடனும் இயற்கையுடனும் கூடி எழுந்த அருளறிவில் ஊறியது; சொல்லழகு, பொருளழகு, யாப்பழகும், அணியழகுடன் சலசலத்தோடுவது; கரடு முரடில்லாத எளிய நடையுடன் ஆவேச கங்கை போலத் தவழ்வது; மூளைக்கு அறிவும், உளத்திற்கு அன்பும், வாழ்விற்கு அழகும், உலகிற்கு இன்பமும், கலைக்கு அருட்பொலிவும் அளிக்கும் பொருள் செழித்தது; அதுவே உண்மையான அருட்கவியாகும். அதைப் பாடுகிறவன் பொன்போன்று மாசற்ற கவியோகி யாவான். அருளும் பொருளும் அழகுந் திருவும் தெளிந்த நடையும் அளந்த சொல்லும், நவரஸ உணர்வும், நன்னெறிச் சிறப்பும், உயிருக்கு இனிமையும், உலகிற்கு ஒளியும் ஈவதே உண்மைக் கவி யாகும். காதல், கற்பு, கருணை, வீரம், கடவுளறிவு, கடவுட்புலமை, ஆன்மநேயம், அருட்சோதி வாழ்க்கை, காலத்திற் கேற்ற காட்சி யறிவு இவற்றைத் தருவதே இன்பக் கவிதை. வியாசர், வால்மீகி, காளிதாசர், வேதரிஷிகள், மாணிக்கவாசகர், அப்பர், வள்ளுவர், சேக்கிழார், கம்பர், ஆண்டாள், நம்மாழ்வார், வள்ளலார், துளசிதாஸ், ஹோமர், தாந்தே, ஷேக்ஸ்பியர், கெதே, ரவீந்திரர், அரவிந்தர்—ஆகியோர்உலகின் அருட்கவிகள். மனித சமுதாயத்தின் வாழ்வில் புதுயுகந் தோன்றும் போதே அருட்கவிகள் உதிக்கிறார்கள். ஆக்குங் கவிதை அருட்கவிதை.

பாட்டும் பரதமும் பண்புள்ள நாடகமும்
நாட்டிற்கு நல்ல நலன். 3

உன்னதமான லட்சியங்களைப் புகட்டி வாழ்வை உயர்த்தும் பண்புள்ள அருட்பாட்டும், பரதநாட்டியமும்,

நாடகமும் ஒரு நாட்டிற்கு நல்ல பயனும் புகழும் தரும். கலைகளை வளர்த்தலே நாட்டின் புகழை வளர்த்தலாம். கவியோகிகளின் அருட்பாடல்களை முழங்க முழங்க, நாட்டில் ஒரு மந்திர மின்சாரம் சுழன்று புதிய சக்தி வளரும். அன்பர் பாடுமிடங்களில் அருள் விளையாடும். நல்ல குரல், ராகம், தாளம், ஸ்வரம், லயம், பக்தி, பரவசம், பொருளுணர்வு, அருளுணர்வு, அந்தக்கரண சுத்தியுடன் முழங்கும் கீர்த்தனாஞ்ஜலியால் காற்றுப் புனிதமாகும். தெய்வப் பெருமைகளைப் பாடியாடும் நவரஸ நடனாஞ்ஜலியால் வாழ்விற்கு இன்பம் உண்டாகும். நாடகமே கலைக்கு அரசு; மேடை வேதம்; நடிக்கும் அறநூல் நாடகக் காட்சிகள் சமுதாய வாழ்வையே மாற்றும்; பொறி வழியே அறிவு புகட்டும்; உலகையும், முக்குணப் போர்களையும் கண்ணாரக் காட்டி வைராக்கியத்தை உண்டாக்கும். நாடகக் கலை ஆடும் வேதமே. பஜனை, கதை சன்மார்க்க விரிவுரை, அருள் நடனம் சன்மார்க்க நாடகம்—இவை சீர்திருத்தச் சாதனங்கள்.

> **கண்ணைக் கருத்தையுறக் கைந்நயத்தை யின்புறுத்தும்**
> **கண்போல நுண்கலையைக் கா.** 4

காவியம், ஓவியம், பாட்டு, நடனம், நாடகம், சிற்பம் முதலியன நுண்ணிய அழகுக்கலைகள். இவை கண்கருத்து கைநயவுணர்ச்சி—இவற்றை இன்புறுத்துவன. இந்த அழகுக் கலைகளைக் கண்போலக் காக்கவேண்டும். அடிக்கடி கலைத் திருவிழாக்கள் நடத்திக் கலைவாணரை ஊக்க வேண்டும். உலகில் பலநாடுகளில் வளரும் கலைகளை நாமும் கற்று மேன்மேலும் கலையறிவை வளர்க்கவேண்டும். கலைக்கோயில் சமரஸக் கோயில். அதில் மேற்கும் கிழக்கும் தெற்கும் வடக்கும் கைகோத்து நடம் புரியலாம்.

> **மெல்லியர்க்கு மென்கலைகள்; வீரத் திறனாண்மைக்(கு)**
> **எல்லார்க்கும் எண்ணோ டெழுத்து.** 5

எண்ணும் எழுத்தும் இருபாலருக்கும் பொதுவா யிருக்கவேண்டும். மெல்லியல்புள்ள பெண்களுக்கு பாட்டு, நடனம், ஓவியம், அணி வேலை, வீட்டின் நிர்வாகம், மருத்துவம் போன்ற கலைகளைப் பயிற்ற வேண்டும். ஆண்களுக்கு வீரத்திருவோங்கும் போர்ப் பயிற்சியும், பெரிய தொழிற் பயிற்சிகளும் தர வேண்டும். வீட்டையும் நாட்டையும் நடத்த வேண்டிய எல்லாப் பயிற்சிகளும் ஆண்களுக்குத் தர வேண்டும். பெண்கள் வாழ்வை அழகு செய்யவும், வீட்டை நிர்வகிக்கவும், சேய் வளர்க்கவும் பயிலவேண்டும். தாய்மாருக்குத் தக்க பயிற்சி அளிக்க வேண்டும். கல்வியானது உடல் மனம் புலன்கள் சித்தம் உள்ளம் முதலிய எல்லா உறுப்புகளுக்கும் பயிற்சி அளிக்கவேண்டும். பதினெட்டு வயது வரையில் பெண்களும், இருபத்து நான்கு வயது வரையில் ஆண்களும் பிரமசரிய விரதம் பூண்டு, கல்வி கற்க வேண்டும். தாய்மொழி, தேசமொழி, ஆங்கிலம், உடல் நூல், உயிர் நூல், பௌதிக, ரசாயன, தாவர சாஸ்திரங்கள், பூகோளம், வைத்தியம், வரலாறு, யந்திரக்கலை, ஏதாவதொரு தொழில், வாணிகம் இவற்றை இருபது வயதுக்குள் ஆண்கள் பழகவேண்டும். அதற்குமேல் நாட்டிற்குப் பயனுள்ள ஏதாவதொரு நல்ல தொழிலைச் சிறப்பாகக் கற்க வேண்டும். அறிவு, தொழில் இரண்டும் இருபாலருக்கும் கண்ணும் கையும் போலும். பெண்களும் பயனுள்ள கலை கற்று, சுதந்தரமாக வாழ வேண்டும். கல்வி எல்லையற்றது; அதை எல்லையறக் கற்க வேண்டும்.

# 5. அன்பியல்

## 1. அன்பு

**அன்பே கடவுளா மன்பே யருஞ்சமயம்**
**அன்பே யறிவிற் கணி. 1**

உலகம் உயிர் இறை எல்லாம் அன்பின் விளக்கமாம். அன்பின் உச்சமே கடவுள். அறிவின் விளக்கம் அன்பு. அன்பின் முதிர்ச்சி அறிவு. மாசற்ற அன்பிருந்தால் அருள் பிறக்கும். அருள் கடவுளைக் காட்டும். உலகிலுள்ள சமயங்களெல்லாம் அன்பையே உயிராகக் கொண்டவை. அன்பே சமய சாரம். அன்பே அறிவிற்கு அணி. அறிவாளியை அன்பினால் அறியலாம். உலகமே அன்பினால் நடக்கிறது. காதல், நட்பு, பக்தி, அருள், ஈகை, இரக்கம், ஒற்றுமை, கலையின்பம் எல்லாம் அன்பினால் வளர்கின்றன. காதலர் அன்பு, இல்லறத்தை நடத்துகிறது. இல்லற வாழ்க்கையே அன்பினால் உலக வாழ்க்கையாக விரிகிறது. குலமே குவலயமாகிறது. உயிரன்பு, உலகன்பு, இறையன்பு என்று அன்பு விரிந்து பரவுகிறது. அன்பு புறம் போந்து, பெயர் வடிவ பேதங்களை அளாவுகிறது. அன்பு உட்குவிந்து, உள்ளத்தில் அருவான இறைவனை உணர்கிறது.

**அன்புள் ளிருந்தால் அடவியிலு மச்சமிலை;**
**தன்போல் அகிலவுயிர் தான். 2**

அன்பு அச்சமறியாது. அன்பு உதட்டில் மட்டுமில்லை; உள்ளத்திலு மிருக்க வேண்டும். உள்ளன்பிருந்தால், உலகுயிர்களை யெல்லாம் தன்மயமாகக் காணலாம். உள்ளன்பன் விலங்குகள் உலாவும் காட்டிலும் அச்ச மில்லாது நடப்பான். புலி கரடிகள்கூட அன்புள்ளத்தை அறியும். காடுமலைகளில் தவம் பண்ணும்போது இரவில் வரும் புலி நரிகள்கூட " இவன் உள்ளம், அன்புள்ளம்" என்று அறிந்து விலகிச் சாதுவாகச் செல்லும். மனதில் வெறுப்பும்,

அசூயையும், பொறாமையும் இருந்தால், அன்பு நிலைக்காது. அன்புள்ளத்தில் தீய எண்ணங்கள் குடிபுகா.

**சுமையுமெளி தாகுஞ் சுடுபகைநட் பாகும்;**
**நமனும்போ மன்பை நயந்து. 3**

அன்பின் சக்தியால் பெரிய சுமைகளைக்கூட எளிதாகத் தூக்கி விடலாம். (தாய் குழந்தையைத் தாங்குவது போல்). நம்மைச் சுட வரும் பகையும் நட்பாகும். அன்புள்ளத்தை நயந்து, வந்த எமனும் திரும்பிச் செல்வான். அதாவது அன்பு சாவையும் வெல்லும். அன்பின் உள்ளம் அமைதி யின்பம் அடையும். அப்போது நரம்புக ளெல்லாம் படபடப்பில்லாமல் நிதானமாக நடக்கும். மூச்சு சமனாகும். அன்பே யோகப்பயிற்சி யாகும்.

**பொன்புகழி னாலன்று; பூதவுட லாலன்றே;**
**அன்பினால் ஆளை அறி. 4**

உலகில் பொன், புகழ், அழகான உடல்—இவற்றால் ஆளை நிதானிக்க முடியாது. அன்பைக் கொண்டே ஆளை அளந்து அறிய வேண்டும். ஒருவன் படிப்பும் புகழும் அழகும் பொருளும் பட்டமும் பதவியும் பெற்றிருக்கலாம்; அவன் உள்ளம் கருங்கல்லா யிருக்கலாம். நெஞ்சம் செருக்கும் சுய நலமும் வஞ்சமும் சேர்ந்திருக்கலாம். உடல் மன்மதாகாரம், உள்ளம் ராவணாகாரமா யிருந்தாற் பயனில்லை. உதட்டில் அமுதும் உள்ளே நஞ்சுமா யிருக்கும் ஆட்களை நம்பலாகாது. அன்புள்ள எளிய நண்பன் அருந்துணை யாவான். ஆளின் பெருமை அன்பே.

**தாயன்பு காட்டித் தமர்பிறரென் றோரமிலா**
**நேயனுக்கு முண்டோ நிகர்? 5**

உலகில் நிகரில்லாப் பொருள் ஆன்ம நேயமே. அந்த நேயம் உள்ளவனுக்கு அன்பே உயிராகும். அவன் எல்லாரிடமும் தாய்போல் அன்பைக்காட்டி, தன்னவர், அன்னியர் என்ற ஓரகமில்லாமல் எல்லாரிடத்திலும்

சமநோக்குடன் நடப்பான். அன்புள்ளத்திற்கு உலகமெல்லாம் ஒரே அருட்குலம். ஆருயிர்ப் பணியே வாழ்க்கை; கருணையுள்ள சமரசமே விழிகள். அன்பின் தீவிரத்தால் தன்னையே உலகிலும் கடவுளைத் தன்னிலும் அன்பன் காண்கிறான். அன்புள்ளம் எங்கும் பரவும்.

## 2. இனிமை

**இன்சொல்லி னில்லை யியம்பி னிணங்காரின்**
**வன் சொல்லை மாற்று மருந்து.** 1

தருமத்திற்கு இணங்காத அதருமப் பகைவர் வன்சொல் வழங்கித் தூற்றினால் அதற்குப் பரிகாரம் என்ன? நாமும் திருப்பித் தூற்றுவதன்று; பொறுமையான இன்சொல்லே அதற்கு மருந்து. கோபப் பாம்பும் குழலுக்கு அடங்கும். கொதிக்கும் நெஞ்சைக் குளிர்மொழி ஆற்றும். கனிமொழியாலே கல்மனம் இளகும். அன்பு, பொறுமை, அடக்கம், உண்மை—இவற்றின் பயனாகவே இன்சொல் உதிக்கும்.

**கன்மீது கூர்செய்யுங் கத்திபோல், வன்சொல்லில்**
**இன்சொல்லைக் கூர்செய் யினிது.** 2

சாணைக்கல்லிலே தீட்டினால் கத்திகூராகும். அதுபோல் எதிரியின் வன்சொல்லில் பொறுமை கொண்டு தீட்டி இன்சொல்லைக் கூர்செய்க. நாரும் மண்ணும் போட்டுத் தேய்த்தால் பாத்திரம் பளபளக்கிறது. அது போல், பகைவரின் கரடுமுரடான சொற்களைப் பொறுப்பதனால், இன்சொல் பளிச்சிடும், சொல் ஒரு சக்தி, சொல் ஆக்கும், அழிக்கும். சொல்லே உலகை ஆளுகிறது. பயனறிந்து சொல்வன சொல்க; கோள், பொய், பொறாமை, கொடுஞ்சொல் இவற்றிற்கு எதிராடாமல், அடங்கி விலகுக. கனி யிருக்கக் கல் உண்பதில்லை; பருப்பை விட்டு ஓட்டைக் கடிப்பதில்லை. மலரை விட்டு முள்ளைக் கொள்வதா? இன் சொல்லிருக்க வன்சொல் ஏன்? தீயன வேட்பதும், கேட்பதும்,

சொல்வதும் தீமையே. நல்லது சொல்வதும் செய்வதும் நலமே. தீயினைப் போலத் தீமையை அஞ்சுக.

**விருப்பினிய சொல்லேயாம் வெம்பகைவன் கோப**
**நெருப்பை யவித்திடுநன் னீர். 3**

கொடும் பகைவன் கோபத்தீயை அணைக்கும் தண்ணீர், அனைவரும் விரும்பத்தக்க இனிய சொல்லேயாம். பதறிப் படபடக்காமல் "இது நல்லது; இது கெட்டது. நீ நல்ல வழிக்கு வரவேண்டும்" என்று இதமாகப் பேசினால், கல்மனமும் கரையும்; கோபத் தீ அணையும். கள்ளன் மனதிலும் கருணைத் தெய்வம் உள்ளது. அறிவும், பொறுமையும், அருளும், அன்பும், வாய்மையுந் தூய்மையும், நேயமுங் கொண்ட இன்சொல், பிறர் உள்ளத்தைத் தொட்டு வாழ்வைத் திருத்தும்.

**மாற்றான்செய் துன்பமெலா மன்னித்துத் தான்மறக்கும்**
**சீற்றமிலான் சீரியனே தேர். 4**

நமது மனதுடன் மாறுபட்ட நண்பனே மாற்றான். அவன் எதற்காக மாறுபட்டான் என்பதை அறிந்து, நியாயத்தை உணர்ந்து பேசினால் அவன் திருந்துவான். மாற்றான் செய்யுந் துன்பங்களை மனதிலேயே வைத்துக்கொண்டு சீறாமல், மன்னித்து மறக்க வேண்டும். அப்படிச் செய்பவனே சீரியன். திரிந்த மனம் திருந்த முயல்க. மனந்திருந்தினால் இனந் திருந்தும்; சினந் திருந்தும்; குணந்திருந்தும். சினத்தைப் பொறுப்பது செந்தண்மை.

**தன்பிழையைப் போக்கிப் பிறர்செய் பிழைதாங்கி,**
**அன்புசெய்வான் அன்பர்க் கிறை. 5**

அன்பன் அன்பு செய்வான். அவன் தன் குற்றத்தைத் திருத்திக் கொள்ள வேண்டும்; பிறர் குற்றத்தைப் பொறுக்க வேண்டும். அவனே அன்பரிற் சிறந்தவன் (இறை). முரட்டுப் பிள்ளைக்கும் பாலூட்டும் தாய் போல், பண்பற்றவர்களுக்கும் அன்பே செய்பவன் பேரன்பன்.

அன்பின் வழியில் பகைவர் துன்பம், பொய், வஞ்சம், சூழ்ச்சி, பொறமை, ஆத்திரம், "நான்" எனும் செருக்கு எல்லாம் வரும். இவற்றை, அருளும் கருணையும் நமது தூயவாழ்வுங் கொண்டு திருத்த வேண்டும். பகைவரைப் பகையாப் பண்பும், பொறுமையும், மனித இயல்பில் நம்பிக்கையும், உறுதியுள்ள முயற்சியும் இருந்தால் எதிரியைத் திருத்தலாம், ஊரைத் திருத்துமுன் உன்னைத் திருத்து. நில்—பிறகு சொல்.

## 3. இன்னாத செய்யாமை

**இன்னாத செய்யாமை யென்னும் ஒழுக்கத்தாம்**
**மன்னுயிர்க் கெல்லா மறை. 1**

"எவ்வுயிருக்கும் தீங்கு செய்யாமை" என்னும் சீவகாருண்ய வொழுக்கமே உலகுயிர்களுக் கெல்லாம் பொதுமறை.

புல் முதல் புருஷன் மட்டும் உயிர் ஒன்றுதான். வெடுக்கென்று கிள்ளினால் பூவுக்கும் வலிக்கும். அன்புடன் நீர் பாய்ச்சி வளர்த்தால் செடி புன்னகை காட்டி முகமலரும். ஓரறிவுயிரான செடிகொடிகளுக்கு இன்பதுன்ப வுணர்ச்சி யுள்ளபோது, ஐம்புல உணர்ச்சியுள்ள விலங்குகளுக்குப் பன்மடங்கு உணர்வதிகம். அவற்றினும் பன்மடங்கு ஆறறிவுள்ள மாந்தருக்கு உணர்வதிகம். எவ்வுயிருக்கும் இன்ன லிழைக்க வேண்டா. தன்னைப்போலப் பிறரை மதித்தலும், வேதனை நீக்கலும் வேதப் பொருளாம். கொல்லா நெறியே கொள்கைக் கினிது. இன்னலிழைத்தால் இன்னலே யெய்தும். இனியது செய்தால் இன்பம் பெறலாம். மஹாத்மாவின் அஹிம்ஸா தருமத்தை நினைக.

**'கொல்லேன், விழையேன், குடிகளவு சூதெண்ணேன்,**
**பொய்யே' னென் றேயுறுதி போற்று. 2**

"நான் எவ்வுயிரையுங் கொல்லேன்; பிறர் பொருளை விழையேன், அவாவேன்; பிறமாதரை இச்சியேன்; கட்குடி,

புகைக்குடி, திருட்டு, சூதாட்டம் இவற்றைக் கனவிலும் நினையேன்; மனசாட்சிக்குப் பொய்யாக நடக்கமாட்டேன்" என்று உறுதிபூண்டு, அவ்வுறுதியைக் காப்பாற்றுவாயாக! பிறர்க்குத் தீமை தனக்கே தீமையாம். நிழலைப் போல வினைப்பயன் தொடரும். இதமே வேண்டின் அதமே செய்யேல்!

அன்பு செய்தலும், துன்பந்தவிர்த்தலும் உலக மதங்களின் உள்ளமாகும். பிறர் மனை, பிறர் சாமான், பிறர் பொருள் இவற்றிற்கு ஆசைப்படுவோன் அமைதி யிழப்பான்; அல்லலிழைப்பான்; பழி சுமப்பான். உலகில் ஒருவரை யொருவர் திருடாமல், வஞ்சியாமல், ஒருவருக்கொருவர் உதவியா யிருக்கவேண்டும். மது மதி மயக்கும். காமம் மனங் கலக்கும். களவு மானமழிக்கும்; உள்ளத்தாலும் கள்ளனாகேல்! திருட்டுச் சொத்து திருட்டுப்போகும். ஊரைச் சுரண்டினால் உள்ளதும் போகும். பறித்தவன் பறி கொடுப்பான். சூதில் விழுந்தோன் தூண்டிற் புழுப்போல் துடிப்பான். வஞ்சிப்பவன் வஞ்சிக்கப்படுவான். திருடன் நெஞ்சு திடுக்குற்றுப் பதறும். இந்த வழுக்குகளற்றதே, வாய்மை யொழுக்கம்.

**மனத்தி லிரக்கமிலா மக்களை மாக்கள்**
**இனத்தினுஞ் சேர்த்த லிழுக்கு.** 3

நெஞ்சில் ஈவிரக்கமற்ற மாந்தரை விலங்கினத்திலும் சேர்த்தல் தவறாகும். ஆடு மாடுகள் மனிதனுக்கு எவ்வளவோ உதவி செய்கின்றன. மனிதன் அவற்றை வதைத்துண்ணல் கொடுமை. பாம்பு புலி கரடிகள்கூட, பழக்கினால் அடங்கி நடக்கும்; மனப்புலி, வஞ்சநரி, பொறாமை நாய், காமப்பன்றி—மனிதனை விலங்கினுங் கேடாக்கும். இரக்கமற்ற மனிதன் வாயில்லா வுயிர்களை வதைக்கிறான்.! கொடுமை!

**கதறக்கொன் றூனுண்ணுங் காதகர்க்கே தன்பு?**
**மதுவுண்பார்க் கேது மதி?** 4

கதறக்கதற உயிர்களைக் கொன்றுண்ணும் கொலையாளிகளுக்கு அன்பு எப்படி யிருக்கும்? மதுவுண்டு மயங்கின வருக்கு நிலைத்த மதி ஏது?

மது மதியைக் கெடுக்கும்; ஊன் உயிரைக் கெடுக்கும். ஊனுண்ணல் இன்றேல் உயிர்க்கொலை யில்லை. மனிதர்க்கு உரியது மரக்கறி யுணவே. உதிர்கனி தானியம் உத்தம வுணவு. அவற்றையும் அளவுடன் உண்ணல் வேண்டும். ஓருணர்வுள்ள தாவரம் விடுத்து, ஐயுணர்வுள்ள ஆருயிரைக் கதறக் கதறக் கொன்றவன், கண்டவன், விற்றவன், கொண்டவன், உண்டவன் அனைவரும் கொலையில் பங்கு கொண்டவராவர். போர்க்கொலை, ஆட்கொலை, பொங்கற்கொலைகள், வேள்விக்கொலைகள், மதவெறிக் கொலைகள், வயிற்றிற்காக வன்கொலை புரிதல். இரத்தச் சோறு பாபப் பொங்கல் எல்லாம் ஒழிக! அன்பு பொழிக! ஊன் மது விலகுக, உயிரன்பிலங்குக!

கூற்று மிடுகாடுங் கூடிய மாக்களே
நாற்றவுட லுண்ணு நரர். 5

உயிர் பிரிந்த பிறகு, நாறிய உடல்களை யுண்ணும் நர மனிதர், உயிர்களைக் கொல்லும் எமனும், உடல்களை விழுங்கும் சுடுகாடும் கூடிய மிருகங்களே யாவர்.

மனிதன் சாவை அஞ்சுகிறான்; தானே பிறவுயிர்களுக்கு நமனாகிறான்; தன்மேற் கத்தி பட்டால் "ஐயோ" என்கிறான்; ஆயிரக்கணக்கான உயிர்களை வாளாலும், யந்திரங்களாலும் அறுத்துண்கிறான். சுடுகாட்டில் உறவினரைப் புதைக்கும்போது மனிதன் விம்மி யழுகிறான். தீங்கற்ற வுயிர்களின் பிணங்களை வாட்டி மசாலை சேர்த்து, வயிற்றுக் குழியில் போட்டுப் புதைக்கிறான்! ஆ கொடுமை!

காய் கனி கிழங்கு தானியம் பருப்பு இவற்றால் ஆகிய உணவு எவ்வளவு சுசிருசியா யுள்ளது! குடலும், குருதியும்,

கொழுப்பும், சதையும், மலமும் நாறும் கொலைக்களன் எவ்வளவு அருவருப்பா யிருக்கிறது! கொன்றுண்ணும் உயிர்களின் கண்ணீரும், கம்பலையும், பிணி துயர் இடும்பைகளும் சாபமும், உண்பவன் இரத்தத்திற் கலந்து வாழ்வைப் பற்றும். கொலை, கொலையைத் தூண்டும்; புலால் மறுத்தலே போர் நிறுத்தலாம்.

## 4. நட்புரிமை

மாணப் பெரியது மன்னோ, மயக்குலகில்
ஆணவமில் லன்புத் தொடர்பு! 1

"நான், எனக்கு, எனது" என்னும் ஆசையால் மனத்தை மயக்கும் இந்த உலகில், தன்னலச் செருக்கற்ற, ஆணவமற்ற, அன்புள்ள நட்பு (தொடர்பு) மிகமிகப் பெரிது.

உண்மை நண்பன் உலகினும் பெரியான். அரிதினரியது அன்புள்ள நட்பு. "தாம், தமக்கு, தமது, தமர்" என்னும் தன்னல வுணர்ச்சி யொழிந்தாலேதான் உலகளாவிய அன்பும், உயிரளாவிய நட்பும் உண்டாகும்.

சுயநலக் காரியவாதிகளே உலகில் அதிகம். உயிரும் உடம்புமே வினை தீர்ந்ததும் விட்டு நீங்குகின்றன. நன்றாக ஆராய்ந்தால், தாமே தமக்குத் தகைபெறு நண்பர். தம் அந்தகரணங்களைச் சுத்தமாக்கி நண்பராகக் கொண்டால், இன்புறலாம். அந்தகரணங்களுடனேயே ஜீவன் பிரிவதால், அதில் வளரும் அன்பும், நன்மையும் என்றும் துணையாகும். உள்ளொன்றிய ஆன்மநேயம் உலகில் அரிது. உள்ளத் தொன்றி, உயிரிற் கலந்து, இன்பத்தின்கண் இன்பமுற்று, கவலைத்துயரில் கைபோலுதவி, வளர்பிறை போலத் தளர்வற வோங்கி, சிறுமையகற்றிப் பெருநெறி பற்றி, தற்புகழின்றிச் சமயத்துதவி, கோள்பொய் யின்றி வாழ்வை யுயர்த்தி நீரிலே தாமரை, வானிலே நீலம், கதிரிடை வெப்பம், மதியிடைத் தண்போல் இணைபிரியாதார் குணமுறு நண்பரே.

**சீரியர் கேண்மை சிறிது கிடைத்தாலும்,**
**ஆருயிர்க்கு நல்லமுத மாம்.** 2

கல்வி கேள்வி யொழுக்கங்களில் ஓங்கிய சீரியர் நட்பு, சிறிது கிடைத்தாலும், அருமையான உயிர்வாழ்விற்கு நல்ல தேவாமிருதம் போல இன்பமாகும்.

உத்தமர் நட்பு மெத்தவு மினிதாம். பெரியார் உறவு பேதமை யொழிக்கும். சிற்றினச் சேர்க்கை குற்றமே பெருக்கும். கற்றவர் கேண்மை கலையை வளர்க்கும். சேர்க்கையைப் போல வாழ்க்கையுமாகும். கடவுளுறுதி, அகந்தை–அழுக்காறு–அவா–சினமின்மை, அன்பும், அருளும், பண்பும், வாய்மையும், உட்புறத் தூய்மையும், உயரிய நினைப்புங் கொண்ட நல்வாழ்வு, குலையா அமைதி, படபடப்பின்மை, சிடுசிடுப்பின்மை, தெள்ளிய இனிமை, ஒள்ளிய மதிநலம், ஆருயிரிரக்கம், ஆத்ம நேயம், பிறர் நலம் பேணல்—இவை பெரியாரியல்பாம். இத்தகைய பெரியாரை வணக்கமுடன் பின்பற்றுவோம்.

**இடித்துத் திருத்து மிணக்க மினிது;**
**கொடுத்தும்புன் கேண்மை கொடியது.** 3

இடித்துப் புத்திமதி சொல்லிக் குற்றத்தைத் திருத்தும் நட்பு மிகவும் இனிதாகும். தாம் விரும்பியதைக் கொடுத்தாலும், அற்ப சகவாசம் கொடிய தீமை விளைக்கும்.

முக்குண விகாரங்கள் பல; மனப் புதரில் புலி நரி பாம்புகள் உண்டு; அறிந்து தெளிந்து தேர்ந்து பழகுக; செம்புக்குக் களிம்புண்டு; தினம் தேய்க்க வேண்டும்; மனக் களிம்பு நல்லோர் கூட்டுறவால் நீங்கும். திருந்திய நட்பே திருத்தும். நம் குறைகளை இடித்துச் சொல்லிக் கண்டித்துத் திருத்தும் பெரியார் உறவே இனிதாகும். சுயநலப் புல்லர் உறவு முதலில் இனித்து, முடிவில் கைக்கும். புலியும் ஆன்மா, பசுவும் ஆன்மாதான். எனினும், இரண்டின் குணங்களும் வெவ்வேறு; புலி மேலே பாயும், பசு பாலீயும்.

நல்லார் உறவு நலமாம்; தீயார் உறவு தீதாம். புல்லர் கேண்மை அல்லலாம். கொடியார் நட்பு நெடிய பகையாம்.

**உடல்பொரு ளாவி யுதவியுங் கொள்க**
**கடவுட் பெரியார் கழல்.** 4

உன் உடல் பொருள் ஆவியைக் கொடுத்தேனும் தெய்வப் பெரியார் திருவடிநேயங் கொள்ளுக!

அளவறு கருணையும், களவறுநடையும், அறிவொளியூற்றும், அன்பு வெள்ளமும், அருளார் மொழியும், தெருளார் மனமும், சமத்துவ நோக்கும் சுத்தான்ம சித்தியும். கடவுட் கலப்பிற் கனிந்த சாந்தமும், பூண்ட பெரியார் பொன்னடி பணிவாம், செருக்கும், வெறுப்பும் சிறுமன வகந்தையும், கன்மனப் பாசமும், காம வெறிகளும், மாய மயக்கும் தீயனவாகும், பெரியார் திருவடி பற்றுதலாவது அவர் அடிச்சுவட்டில் நடப்பது, அவரைப் பின்பற்றி நல் வழியில் நடப்பதாம். உண்மையே விரும்பி, உள்ளன்பீந்து பணிவுடன் வேண்டும் பணிவிடை செய்து, திருவாய் மொழிகளைச் சிந்தித் தொழுகிப் பெரியார் அருளைப் பெறுக நல்லன்பர்.

**உயிரைக் கொடுத்து முயிர்பிரியா துள்ளே**
**உயிரொன்றி நட்டார் உறவு.** 5

நட்பென்பது உள்ளத்திற் பற்றி, உயிரிற் கலந்து, ஒன்ற வேண்டும். அப்படிப்பட்ட நண்பர் ஒருவருக்கொருவர் உயிர் கொடுப்பர். உயிர் பிரிந்தாலும் உண்மை நண்பர் நட்புரிமை பிரிவதில்லை. இன்னொரு பிறவியிலும் இருவரும் நண்பரா யிருப்பர்.

இருமனப்பாசம், இரத்தக் கலப்பு, செல்வச் செழிப்பு, சிறந்த வண்மை, அழகு மயக்கம், அருங்கலை விருப்பம், ஆசைத் தினவு, பாசப்பற்று இவற்றால் உறவுகள் எண்ணில வுண்டாம். காமவுறவு கைத்துப்போகும். அரசர் சலுகையும் விரசமாய்ப் போகும். உயிர்க்குயிர் கலந்தார் உறவே நிலையாம். அதுவே ஆன்மநேயமாகும். மெய்யுறவு

ஆன்மவுறவே; பொய்யுறவு மினுக்குறவே. ஆன்ம வுணர்வில் ஆழ்ந்து வேரூன்றி, அன்பாற் பெருகி, அனுபவங்கிளைத்து, இன்பதுன்ப வெயில் மழை தாங்கி, அருள் மலர் குலுங்கி, அறிவு கனிந்த கற்பகம்போல நிற்பது நட்பாம். அத்தகைய ஆன்ம நேயத்தில் உதித்த இன்பக் கனிகள் தெய்வச் சுவை நல்கும். அன்பிற்காகவே அன்பாற் கலந்தவர், உடல் பிரிந்தாலும் உயிர் பிரியாரே. உள்ளொன்றானால் உயிரொன்றாகும். அத்தகைய இயல்பான நட்பு இறப்பையும் வென்று விளங்கும்.

## 5. பொறுமை

ஆற்றல் பொறையளவே யாகு மதனாலே
யேற்றம் பெறுமெங்கு மே. 1

ஒருவனுக்கு எவ்வளவு பொறுமை யுள்ளதோ, அவ்வளவே ஒரு காரியத்தைச் சாதிக்கும் ஆற்றலும் இருக்கும். உறுதியான பொறுமையால் ஒருவனுக்கு எங்குமே மேன்மை கிடைக்கும்.

அன்பிற்கு ஆர்வம் உள்ளம், ஒற்றுமை உயிர்ப்பு, உண்மை கரணம், கண்ணோட்டம் விழிகள், தியாகம் உடலம், பொறுமையே நரம்பு, ஆன்மநேய மென்னும் ஊற்றினின்று பொசியும் அருவியே அன்பு. அன்பின் வெற்றி பொறுமையாலெய்தும். படபடப்பின்மை, இடம் பொருளறிதல், காலமறிதல், கருத்தி லுறுதி, உண்மைக்கு வெற்றி யுண்டென நம்புதல், அறிஞர்சொற் படிதல், அகந்தையின்மை, போட்டி,-பொறாமை-பொய்-சினமின்மை, பகைவரின் வஞ்சத் தூண்டிலிற் படாமை, வீழினும் ஓங்கினும் விடாமுயற்சி, இடர்களை வெற்றிப் படிகளாய்க் கொள்ளல், பகைவரைப் பகையாது பழுதைத் திருத்தல், ஆன்ம நிச்சயம், அஞ்சாத் துணிவு, பொன்றவரினும் புன்னகைப் பொலிவு, எல்லாருக்கும் இன்பமே நினைத்தல்—

